SHIVAJI

TAMIL WEEKLY

# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
30th year
of Publication
21—2—1965

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் | ஆசிரியர்: திருலோகசீதாராம்

# எரியும் நெருப்பிலே எண்ணெய்

## வடக்கிற்கு நிதானமும் நாவடக்கமும் தேவை!

## தெற்கிற்கு தெளிவான சிந்தனையும் திட்டவட்டமான முடிவும் தேவை!!

சாலை இளந்திரையன்

நமது நாட்டு மொழிகளில் ஒன்றாகிய இந்தியை ஆட்சி மொழி ஆக்குவதில் உள்ள தொல்லைகளை நாடு ஓரளவு அறிந்திருக்கிறது. ஆயினும், பல்வேறு காரணங்களால், ஆட்சியில் இருப்போர் இதை எல்லாம் அறியாதவர்கள் போல இருந்து வருகிறார்கள்.

வீட்டிலோ, ஊரிலோ, நாட்டிலோ, — எங்கேயானாலும் எந்தச் சிக்கலுக்கும், அவ்வப்போது உள்ள சூழ்நிலைக்கு ஏற்பவே தீர்வு காண வேண்டும். எப்போதும் உயர்வாகவே மதிக்கப்படுகின்றவர்கூடத் தாழ்ந்து போகவேண்டிய சூழ்நிலைகள் பல சமயங்களிலே வீட்டில், ஊரில், நாட்டில் ஏற்படுவதைப் பார்க்கிறோம். அதுதான் பொது விவகாரங்களைச் சமாளிக்கின்ற முறை. 'ஆட்சி மொழிச் சட்டத் திருத்தம்' பாராளுமன்றத்தில் கொண்டுவரப் பட்டபோது, மக்களின் தன்னேரில்லாத் தனிப்பெருந் தலைவர் நேருவே இந்தி அன்பர்களின் போக்குக்குக் குனிந்து கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டதை நாம் அறிவோம். குடியாட்சி முறையில் இப்படி நிலைகள் ஏற்படுவது இயற்கை.

அப்போது பணிந்து போன தென்னிந்திய மக்கள் இப்போது எழுந்து நிற்கிறார்கள். அவர்களின் வேகத்தை அன்பு முறையிலேதான் மாற்ற வேண்டுமே தவிர, முரட்டு அடக்குமுறையினால் நசுக்க முயலக் கூடாது; அது குடியாட்சிக்கு உகந்த பண்பும் ஆகாது.

இது இவ்வாறிருக்க, மத்திய அரசில் உள்ளவர்களில் சிலரும் வேறு சில வடஇந்திய அன்பர்களும், குறுக்கே புகுந்து, வாய்க்கு வந்தபடிப் பேசி நிலைமையை மோசமாக்கி வருகிறார்கள். தெற்கில் நடக்கும் இந்தி எதிர்ப்பைக் குறித்து அவர்கள் பேசுகின்ற பேச்சு பல சமயங்களில், எரியும் தீயில் எண்ணெய் ஊற்றிய கதையாகவே முடிந்து விடுகிறது. 'நாம் பேசாமலிருந்தால் பணிந்து விட்டோம் என்று எண்ணி விடுவார்களோ?' என்ற அச்சத்திலேயே அவர்கள் இப்படி எல்லாம் ஏதேதோ பேசிக் குழப்புகின்றார்கள். பேச்சுக்கு எப்போதும் மதிப்புக் கிடையாது; பேசவேண்டியதைத் தக்க தருணத்தில் பேசும் போதுதான் அது மதிக்கப்படுகிறது...

பொறுப்பு வாய்ந்த வட இந்திய அன்பர்கள் சிலர் பின்வருமாறு மேடைகளில் பேசியும், பத்திரிகைகளில் எழுதியும் வருகிறார்கள்;

'தென்இந்தியர்கள் புத்திக்கூர்மை உள்ளவர்கள். அவர்கள்தான் சமஸ்கிருதம் படித்துச் சிறந்தார்கள்; ஆங்கிலத்தைச் சிறப்பாகப் படித்ததும் அவர்களே. ஆதலால் இந்தியை அவர்கள் எளிதாகப் படித்துவிடலாம்;- ஏன் எதிர்க்கின்றார்கள்?'

இந்தப் பேச்சு அர்த்தமற்றது என்பதை ஓரளவு அறிவு உள்ளவர்களும் தெரிந்து கொள்ளுவார்கள். அறிவும் திறமையும் பகுதி பகுதியாக ஒதுங்கித் தேங்கி நிற்கவில்லை; எல்லா இடமும் பரவலாக அவை உள்ளன. தங்களுக்குச் சாதகமாக, இப்படி முகஸ்துதி பேசும் வடஇந்திய அன்பர்களைப் பார்த்து, 'நாங்கள்தான் புத்திசாலிகள் என்றால் நாங்கள்தான் நாட்டை ஆள வேண்டும்; (அறிவாளி ஆள்வதுதானே எல்லோருக்கும் நல்லது?) நீங்களெல்லாம் மாடுமேய்க்கவும் மரம் வெட்டவும் போங்கள்' என்று தென்னிந்திய அன்பர்கள் கூறலாமல்லவா? தவிரவும், 'சமஸ்கிருதம் படிக்க முடியாதவர்களின் மொழி, ஆங்கிலம் படிக்க முடியாதவர்களின் மொழி எவ்வளவு சாமானியமானதாக இருக்கவேண்டும்! அதை ஏன் நாம் வீணில் படித்து, முயற்சியை விழலுக்கு இறைப்பது?' என்றும் அவர்கள் எண்ணலாமல்லவா? கடைசியாக, 'நம்மைக் குல்லாப்போட்டுக் குழியில் தள்ள அல்லவா, நமது இந்திக்காரர்கள் பார்க்கிறார்கள்!' என்று உணர்ந்து, இந்தித் திட்டத்தையே எதிர்ப்பார்களல்லவா?

மற்றொன்று: 'சமஸ்கிருதத்தைப் புகுத்தியபோது படித்தார்கள்; (அது யாருடைய மொழியுமல்ல). பாரசீக மொழியைப் புகுத்தியபோது படித்தார்கள்; (அது இந்திய மொழி அல்ல.) ஆங்கிலத்தைப் புகுத்திய போது படித்தார்கள்; (அதுவும் இந்திய மொழி அல்ல). இந்தியை மட்டும் ஏன் படிக்கக் கூடாது?'—இப்படியும் சிலர் சொல்லி வருகின்றார்கள். இந்த மொழிகள் ஒவ்வொன்றும் புகுத்தப்பட்ட போதெல்லாம் (மற்றப் பகுதிகள் எப்படி இருந்தாலும்) தமிழகத்தில் எதிர்ப்பு இருந்தே வந்திருக்கிறது என்பது ஒருபுறம் இருக்க, ஆதிக்க ஆணவத்தால் நம் மீது திணிக்கப்படுவதற்கும் நாமே விரும்பி அமைத்துக் கொள்ளுவதற்கும் வேற்றுமை இருக்கவேண்டாமா? இல்லாவிட்டால் ஏகாதிபத்திய ஆட்சிக்கும் குடியாட்சிக்கும் என்னதான் வேறுபாடு?

'அதை எல்லாம் படித்தீர்கள்; இதையும் ஏன் படிக்கக் கூடாது?' என்று கேட்பது ஏகாதிபத்தியப் போக்கு. இப்படிக் கேட்பது ஒன்றே எதிர்ப்பு உணர்ச்சியைத் தூண்டிவிடப் போதுமானது. 'முன்பு ஆண்டவன் அந்நியன்; அவனுடைய கத்திமுனைக் கட்டாயத்துக்காகப் படித்தேன்;—விரும்பிப் படித்ததில்லை. இப்போதும் அப்படிக் கட்டாயத்துக்குத்தான் நான் படிக்கவேண்டும் என்றால், — நமக்குச் சுதந்திரம் வந்துவிட்டதாகச் சொல்லுகிறீர்களே, அதிலே எனக்கு மட்டும் பங்கு இல்லையா? நான் இன்னும் அடிமைதானா?' என்று மற்ற மொழிக்காரன் கேட்கலாம் அல்லவா?

நமது இந்தி அன்பர்கள் ஒரு பெரிய தவறு செய்கிறார்கள்; இந்தியாவின் தாய் மொழி என்றால், அது இந்தி ஒன்றே என்பது அவர்களின் எண்ணம். இந்தியத் தேசீயத் தாய் மொழிகளாக மேலும் பதின்மூன்று மொழிகள் அரசியல் சட்டத்திலேயே ஏற்கப்பட்டிருப்பதை அவர்கள் அடிக்கடி மறந்துவிடுகின்றார்கள். 'இந்தி இந்திய நாட்டின் ஒரு மொழி, ஆதலால் அது அந்நிய மொழியான ஆங்கிலத்தைவிட நமக்கு நெருக்கமானது என்று இந்தி மக்கள் எண்ணுவதும், சூழ்நிலையைப் புறக்கணித்துக் கூச்சல் போடுவதும், இந்தி மக்கள் தவிர உள்ள பிற இந்தியர்களை அவர்கள் மக்களாகவே மதிக்கவில்லை என்பதையே காட்டுகிறது. இந்தியைத் தாய்மொழியாகக் கொண்ட நமது மக்களுக்கு ஆங்கிலத்தைவிட இந்தி ஆயிரமாயிரம் மடங்கு அணுக்கமானது. அதை யாரும் மறுக்க முடியாது, ஆனால், நாளது தேதிவரை (கடந்த சுமார் 200 ஆண்டுகளாக) இந்தியைவிட ஆங்கிலமே மற்ற இந்திய மொழி மக்களுக்கு அருகில் இருந்து வந்திருக்கிறது என்பதை அவர்கள் அடியோடு மறந்துவிடுகிறார்கள். இதைத் தெளிவாக உணருவதற்குத்தான் சூழ்நிலை அறிவு வேண்டும்.

> 'செயற்கை அறிந்தக்
> கடைத்தும், உலகத்து
> இயற்கை அறிந்துசெயல்'

என்பது வள்ளுவ அரசியல் நெறி. செய்யப்படவேண்டியது இன்னது என்று தெரிந்திருந்தால் போதாது; அப்போது உள்ள சூழ்நிலையில் அதை எப்படிச் செய்வது என்றும் தெரியவேண்டும்.

இப்போது உள்ள சூழ்நிலை என்ன?... இந்தியா ஒன்றாக இருக்கவேண்டும் என்பது நமது விருப்பம்; அரசியல் அரங்கில் தவிர, மற்ற நிலைகளில், இந்தியர்களுக்குள் இறுக்கமான ஒற்றுமையை உண்டாக்கும் தேசீயக் கூறுகள் இன்னும் உருவாகவில்லை. அனைத்திந்தியச் செல்வாக்கு உள்ள தலைவர்கள் போய்விட்டார்கள்; இப்போது உள்ள இந்தியத் தலைவர்களின் செல்வாக்குப் பரப்புக் குறைந்துவருகிறது. மாநில அளவிலேயே தலைமைகள் உருவாகக் கூடிய சூழ்நிலை இருந்துவருகிறது.

நமது தேசீய உணர்ச்சியை (முன்பு) அகில இந்திய அளவில் பரப்பியது ஆங்கிலம். அப்போது இந்தி மாநிலங்களுக்கு வெளியே இந்தி சென்றதில்லை; அம்மாநில மக்களோடு உறவாடியதுமில்லை. அந்த உறவு உரிமை ஆங்கிலத்துக்கே கிடைத்திருந்தது.

இப்போது நமக்கு இந்திய ஒருமைப்பாடு முக்கியம்; அதைக் கட்டிக்காக்க அகில இந்திய ரீதியில் செல்வாக்குப் பெறக்கூடிய தலைவர்கள் வேண்டும். முன்பு சுதந்திரம் நமது பொது இலட்சியமாக இருந்த அளவுக்கு, இந்தியர் அனைவருக்கும், பொதுவான லட்சியம் எதுவும் இப்போது இல்லை. பொது இலட்சியங்களான அய்ந்தாண்டுத் திட்டங்களிலேயே மாநில வாரியான அடிதடிகளையே காண்கிறோம்!

முன்பு நம்மை ஒற்றுமைப் படுத்தியவை மூன்று: சுதந்திர வேட்கை, அனைத்திந்தியத் தலைமை, ஆங்கில மொழி என்பன அவை. இந்த மூன்றில் ஒன்றை நாம் மாற்ற விரும்பினால் மற்ற இரண்டும் உறுதியாக இருக்க வேண்டும். கட்டிடத்தைப் புதுப்பிக்க விரும்புவோர் நான்கு தூண்களையும் ஒரே சமயத்தில் இடித்துத் தள்ள மாட்டார்கள்; ஒவ்வொன்றாகத்தான் மாற்றிவருவார்கள். நம் நிலை என்ன? தேசீய ஒற்றுமையின் முப்பெருந்தூண்களில் இரண்டு ஏற்கனவே கலகலத்து நிற்கின்றன. ஆமாம். அகில இந்தியத் தலைமை (நேருவுக்குப் பின்) வலுவிழந்து வருகிறது; தேசீயப் பொது லட்சியங்களிலும் மக்களுக்கு முன்பு போல், பிடிப்பு இல்லை. இந்த நிலையில் மூன்றாவது தூணாகிய ஆங்கிலத்தையும் இடித்துத் தள்ளிவிட்டால், ஒருமைப்பாடு என்பது வெறுங்கனவே...

இதே வேளையில், ஆங்கிலம் அகில உலகத் தொடர்புக்கும், இக்காலத்துக்கு இன்றியமையாத விஞ்ஞான உயரறிவுக்கும் சிறந்த கருவியாக உயர்ந்துவிட்டது. அதன் முக்கியத்

[3-ம்பக்கம் பார்க்க]

உலகில்

# தண்ணீர் பஞ்சம்

உலகப்பரப்பிலுள்ள 36000 கன கிலோ மீட்டர் நீரில் 20,000 கன கி. மீட்டரே உபயோகிக்கக் கூடியது. இந்த அளவு நீர் 2000 கோடிபேரின் தேவையைப் பூர்த்தி செய்ய முடியும். கி. பி. 2100-ல் உலகின் மக்கட் தொகை அவ்வள வாக உயர்ந்து விடும் என்பது நிபுணர்கள் கருத்து. ஆகவே, சமீப எதிர்காலத்தில் உலகை "தாகம்" எனும் பேய் அச்சுறுத்தப் போவதில்லை.

எனினும், உலகப்பரப்பில் பாதிக்கு மேல் இப்பொழுது குடி நீர்ப்பற்றுக்குறை ஏற்பட்டுள்ளது. இதன் காரணம் வேகமான தொழில் வளர்ச்சியும், விவசாயவளர்ச்சியுமே. உதாரணமாக ஒரு டன் உருக்கு உற்பத்திக்கு 270 டன் நீர் தேவைப்படுகிறது. ஒரு டன் செயற்கை நூல் உற்பத்திக்கு 600 டன் நீரும், ஒரு டன் ரப்பர் உற்பத்திக்கு 2500 டன் நீரும் வேண்டியிருக்கிறது. மேலும், கழிவு நீர், ஆற்று நீரை, அசுத்தப்படுத்துவதால், குடிநீரின் அளவும் குறைந்து விடுகிறது. அதனால்தான் குடி நீர்த் தேட்டம் நாளுக்கு நாள் மும்முரமாகிவருகிறது. புதிய தாக குடி நீரைக் கண்டுபிடிக்கும் ஆராய்ச்சி தீவிரமடைந்து வருகிறது.

தற்போது மூன்று திசைகளில் இவ்வாராய்ச்சி நடைபெற்று வருகின்றது. கடல் நீரைக் குடிநீராக்குவது ஒன்று; மற்றொன்று பனிப் பாறைகளை நீராக்குதல், பனிப்பாறையியல்வல்லுநர்களின் கருத்துப்படி, நிலப் பரப்பில் 12 சத விகிதத்தை அடைத்துக் கொண்டிருக்கும் அப்பாறைகள், உலகின் எல்லா நதிகளும் சேர்ந்து அளிக்கும் நீரைவிட 800 மடங்கு அதிகமான நீரைக் கொடுக்கவியலும், கிரீன்லாந்தின் அருகேயுள்ள பனிப்பாறைகளை அமெரிக்காவிற்குக் கப்பல் மூலம் அனுப்பும் சாத்தியக் கூறுகள் பற்றிக் கூட அண்மையில் அமெரிக்கா விவாதித்தது. மூன்றாவதாக, பூமிக்கடியிலுள்ள நீரை வெளிக் கொணருதல்.

சோவியத் யூனியனில், பூமிக்கடியில் எங்கெங்கு நீர்த் தேக்கமுள்ளது என்ற முழு விவரத்தையும், மாஸ்கோ பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த நீரூற்றியல் நிபுணர்கள் கணித்துள்ளனர்.

பூமிக்கடியிலுள்ள நீரூற்று அனைத்தையும் இதுவரை எந்த நாட்டிலும் இவ்வளவு திட்டவட்டமாகக் கணித்தது கிடையாது. புதிய விஞ்ஞான முறைகளின் மூலமாக இது சாத்தியமாயிற்று.

ஆற்று நீர் வளத்தின் அடிப்படையில் பார்க்கப் போனால், சோவியத் யூனியன் உலக நாடுகளிலேயே முதன்மை ஸ்தானம் வகித்தாலும்கூட, இங்கும் குடிநீர்ப் பிரச்சினை மிக முக்கியமானதாகவே கருதப்படுகிறது. ஏனெனில் நாடு முழுதும் குடி நீர் சம அளவில் காணப்படவில்லை. அதிகமான நீர் உள்ள பிரதேசம் சைபீரியாவும், தூரக்கிழக்குப் பகுதியுமே. அதிகத் தொழில் வளமும், மக்கட் பெருக்கமும் உள்ள ஐரோப்பியப் பகுதிகளிலும், கஸாக் ஸ்தானிலும் நாட்டின் நீர் வளத்தில் ஐந்தில் ஒரு பங்கேயுள்ளது.

வருங் காலத்தை நாம் மறந்துவிட முடியாது. 1980-ல் தொழிற்சாலைகளுக்குத் தேவையானதும், ஆவியாதல் மூலம் செலவாவதுமான நீர், வால்கா நதியில் ஓராண்டில் செல்லும் நீருக்குச் சமமானதாகிவிடும். தவிர, தொழிற்சாலைக் கழிவுகளினால் சில நதிகள் பாதிக்கப்பட்டால், அவை பயன் படுத்துவதற்கு அருகதையற்றதாகிவிடும்.

நீரூற்றுக்கள் மிகச் சுத்தமான நீரைக் கொடுக்க வல்லது எனினும், அவற்றை எடுத்து உபயோகப்படுத்துவதற்கும் சில வரையறைகள் இருக்கத்தானே செய்கின்றன.

நீரூற்றியல், நீரியல், நிலரசாயனவியல், நிலவியல், ஆகிய அனைத்துத் துறைகளின் ஒத்துழைப்பின் மூலம் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டு அதனடிப்படையில் வருங் காலத்தில் தொழில் பெருக்கமும் விவசாயப் பெருக்கமும் ஏற்படுவதே இப்பிரச்சினையை தீர்க்க வல்லது என்று கூறின் அது மிகையாகாது.

★

## தமிழ் நாட்டின் ஆதிக்கம்!

தென்னிந்தியா மீது வட இந்தியா ஆதிக்கம் செலுத்துகிறது என்ற பேச்செல்லாம் சுத்த அபத்தம். பெரிய தலைவர்களும் பிரமுகர்களும் பொதுவாக ஹிந்திப் பகுதிகளைச் சேர்ந்தவர்களாக இருப்பதால்தான் தி. மு. க.-வின் இந்த அண்டப் புளுகு உண்மைபோல தோற்றமளிக்கிறது. உண்மையில் பொருளாதாரம், கல்விமற்றும் சர்க்கார் துறைகளில் வட இந்தியா மீது தமிழ் நாடுதான் ஆதிக்கம் செலுத்துகிறது என்று சோஷலிஸ்டு தலைவர் டாக்டர் ராம் மனோகர் லோகியா ஒரு பேட்டியில் கூறினார்.

★



# நேருஜியும் இந்தியாவும்

நேருவின் வாழ்க்கை, லட்சியங்கள், சாதனைகள் ஆகியவற்றை விளக்கும் வகையில், நியூயார்க் நகரில் புகைப்படக் காட்சி யொன்றுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இக்கண் காட்சிக்கு, 'ஜவாஹர்லால் நேரு—அவரது வாழ்க்கையும் அவரது இந்தியாவும்' எனப் பெயரிடப்பட்டிருக்கிறது. ஜனவரி 28-ந்தேதியன்று பொதுமக்கள் பார்க்க அனுமதிக்கப்பட்ட நான்கு மணிநேரத்திற்குள்ளாகவே மூவாயிரம் பேர் அதைப் பார்த்துவிட்டார்கள். இத்தனைக்கும் அப்பொழுது அலுவலக நேரம்!

முந்திய நாள் மாலையில் கண்காட்சியை அமெரிக்க உதவி ஜனாதிபதி ஸ்ரீ ஹுபெர்ட் ஹம்ப்ரி ஆரம்பித்து வைத்தார். அவர் பதவிப்பிரமாணம் எடுத்துக் கொண்ட பிறகு கலந்து கொள்ளும் முதலாவது அதிகாரச்சார்புள்ள நிகழ்ச்சி இதுவே. பத்திரிகைகள், வானொலிகள், டெலிவிஷன்கள் ஆகியவை இந்நிகழ்ச்சிக்குச் சிறப்பிடம் அளித்தன. நமது காலத்திற்கு நேரு ஆற்றியுள்ள மகத்தான பணியைப்பற்றிக் குறிப்பிட்ட ஸ்ரீ ஹம்ப்ரி, தாம் செனேட்டராகப் பதவி வகித்தபோது இந்தோ—அமெரிக்க நல்லுறவை வளர்க்க எடுத்துக்கொண்ட முயற்சிகளைப்பற்றிச் சொன்னார்.

கண்காட்சியைத் துவக்கி வைக்க அவர் வந்த போது, ஏராளமானவர் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து வரவேற்றனர். புகழ்மிக்க எழுத்தாளர்கள், ஓவியர்கள், சிற்பிகள், பல்கலைக் கழக மாணவர்கள், பிரபல அரசியல் வாதிகள் ஆகியோர் வந்திருந்தனர். ஐ. நா. பொதுக் காரியதரிசி ஸ்ரீ ஊதாண்ட், ஐ. நா. பொதுச் சபைத்தலைவர் ஸ்ரீ அலெக்ஸ் குவாய்ஸன் சாக்கே, ஸ்ரீமதி ஜாக்குலின் கென்னடி, அமெரிக்கப் பிரதம நீதிபதி வாரன் பிரபு, நியூயார்க் மேயர் லாக்னர், செனேட்டர் ராபர்ட் கென்னடி, அட்லாய் ஸ்டீவன்ஸன், நியூயார்க் ராஜ்ய கவர்னர் ராக்ஃபெல்லர், இந்தியாவில் முன்பு அமெரிக்கத் தூதராகப் பதவி வகித்தவர்கள் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

இந்திய வரவேற்பாளர்கள், விழாவுக்கு வந்திருந்தவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு ரோஜா மலரைக் கொடுத்து இன்முகத்துடன் வரவேற்றனர். இந்தியத் தூதர் பி. கே. நேருவின் இந்தச் சுபமங்கல ஏற்பாட்டை அனைவரும் சிலாகித்தனர்.

கண்காட்சியைத் துவக்கி வைத்து ஸ்ரீ ஹம்ப்ரி பேசுகையில், 'இந்தக் கண்காட்சிக்கு ஜவாஹர்லால் நேருவும் அவரது இந்தியாவும் என்று பெயரிட்டிருக்கிறார்கள். 'அவருடைய' என்று சொல்வது அனுவசியமாகும். ஏனென்றால், நேரு இந்தியாவாகவே இருந்தார்' என்று புகழ் மாலை சூட்டினார்.

நேருவின் வாழ்க்கை வரலாற்றையும், அவர் விடுதலைக்காகப் பாடுபட்டு, கட்டிவளர்த்து, கடைசி மூச்சு வரை தொண்டாற்றிய இந்தியாவின் வரலாற்றையும் சித்திரிக்கும் 1,200 படங்கள் இக்கண்காட்சியில் இடம் பெற்றுள்ளன. நேருவின் அமுத மொழிகளும் கருத்துக்கு விருந்தாய்ச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பலர் அவற்றை ஆர்வத்துடன் குறிப்பெடுத்துச் செல்கின்றனர்.

அவரது குடும்பப் புகைப் படங்கள் பல, தற்போது முதல் தடவையாகப் பொது மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. இவற்றுள் ஒன்று, நேரு தம்முடைய வளர்ப்புத் தாதியுடன் இருக்கும் படமாகும். இது 1890ம் ஆண்டு ஏப்ரல் 14-ந்தேதி எடுக்கப்பட்டது. அப்போது நேரு ஐந்து மாதக் குழந்தை.

'நாங்கள் மீண்டும் இங்கு வந்து விரிவாகப் பார்க்க வேண்டும்' என்பதே, பார்வையாளர்கள் அனைவரின் பொதுவான கருத்தாக இருக்கிறது. ஊதாண்ட், பேராசிரியர் கால்பிரெய்த், பிரதம நீதிபதி வாரன் போன்றவர்களும் இவ்வாறு கூறியுள்ளனர். பத்திரிகைகள், டெலிவிஷன்கள் மூலம் கண்காட்சியைப்பற்றி அறியும் நியூயார்க் நகரவாசிகள் நூற்றுக் கணக்கில் வந்த வண்ணம் உள்ளனர்.

★

# பாம்புக் கடிக்கு உடனடி நிவாரணம்

"ஒவ்வொரு ஆண்டிலும் ஆயிரக் கணக்கானவர் பாம்புக் கடிக்குப் பலி ஆகின்றனர். லட்சக் கணக்கில் தேள் கடிபட்டு அவதியுறுகின்றனர். இதற்கு நிவாரணம் உண்டு. "சுகநாஸம்" என்று பெயருள்ள ஒரு செடியின் விதையை உபயோகித்து அவ்விஷங்களிலிருந்து மீள்வது சாத்தியம். இந்த விதையைக் கல்லில் கொஞ்சம் தேய்த்து நீர் விட்டுச் சிறிது மிளகையும் சேர்த்து அரைத்துப் பசையாக்கி விழுங்கிவிட வேண்டும். அவ்வளவுதான். குணமாகிவிடும். இதற்குப் பத்தியம் போன்றவை ஒன்றும் கிடையாது. மேற் குறிப்பிட்ட விதைகள் கடைகளில் கிடைக்கக் கூடியவை அல்ல. தேவையானவர்கள் அந்தச் செடியைத் தத்தம் தோட்டங்களில் வளர்க்கலாம். சாதாரண நிலத்தில் அது பயிராகக் கூடியதுதான். ஒரு செடி வளர்ந்து, பெரிதானதும் நிறைய விதைவிடக் கூடியது.

35 பைசாவுக்கான தபால் தலைகளைச் சேர்த்து விண்ணப்பிப்பவர்களுக்கு சில விதைகளும், செடி வளர்க்க வேண்டிய விவரங்களும் அனுப்பி வைக்கப்படும். இதுபற்றிய கடிதத் தொடர்புகள் யாவும் ஆங்கிலத்திலேயே இருக்க வேண்டும் என்று ஸ்ரீ டி. கே. அனந்தராமய்யர் பி.ஏ., "ராம நிவாஸ்", முனிசிபல் ஆபீஸ் ரோடு, பாலக்காடு (கேரளம்) எழுதுகிறார்.

## கணித போதனை

அலெக்ஸாந்தர் என்பவர் ஒரு கணித ஆசிரியர். இவர் மாஸ்கோ பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஒரு போர்டிங் பள்ளியில் பணியாற்றுகிறார். இப்பள்ளியில் 14-15 வயது மாணவர்களுக்கு அவர் 18 மாதங்களாக உயர் அல்ஜிப்ராவும், கணிதமும், பௌதிகமும் கற்பித்தார்; பல்கலைக்கழக மூன்றாவது ஆண்டுப் பாடங்களைப் பதினைந்து வயது மாணவர்களுக்குப் போதித்தார்!

இப்போதனையின் விளைவுகள் குறித்து, விஞ்ஞானிகள் கழகத்தைச் சேர்ந்த தமது சக ஆசிரியர்களிடமும் அவர் கருத்துத் தெரிவித்தார்.

மற்ற பாடங்களின் போதனையை வெட்டிக் குறைத்தால், இந்த இளைஞர்களைத் தேர்ந்த கணித நிபுணர்கள் ஆக்கலாமாம்.

அவரது பரிசோதனையின் விளைவுகள் வருமாறு.

மிகக் கடினமான பத்துக் கணக்குகளில், 7 கணக்குகளைச் சரியாகச் செய்துவிட்டார்கள் இந்தப் பதினைந்து வயதுச் சிறுவர்கள்.

இவர்கள் இளம் மேதைகளோ! இவர்களில் முதல் பிரிவினர், 18 ஆண்களும் 1 பெண்ணும், இப்பொழுது தான் பள்ளிப் படிப்பில் தேறினர்.

இப்போர்டிங் பள்ளியில் பல டஜன் மாணவர்களும், 13 பெண்களும் உள்ளனர். இவர்களில் சிலருக்கு பல்கலைக் கழக கணிதம்கூட, மந்தமாக-பற்றுக்குறையாக-இருக்கிறது. ஏனையோர், சராசரி மாணவர் நிலையில் உள்ளனர்.

இம்மாணவரில் பெரும் பாலோர் கணக்கு நிபுணர்களின் குழந்தைகள். சிலர் கிராமங்களிலிருந்து படிக்க வந்தவர்கள். ஆசிரியர்கள் எவ்வளவு கடினமான கணக்குகளைப் போட்ட போதிலும், இவர்களில் யாரும் சளைப்பதில்லை; பயந்து பின்வாங்குவதில்லை. இரவு வேளைகளில் ஆசிரியர்களுக்குத் தெரியாமல், எங்கோ பதுங்கிய வண்ணம் கணக்குச் செய்கின்றனர் இந்தப் பதினைந்து வயதுப் பேர்வழிகள்.

இவர்களைப் பதுங்குமிடங்களிலிருந்து இரவில் பிடித்திழுத்து வரவேண்டி இருக்கிறது. இவர்களுக்குக் கணக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. எனவே, வேளாவேளையில் உறங்க மறுக்கிறார்கள் என்கிறார்கள் ஆசிரியர்கள்.

இத்தச் சிறுவர்களுக்கு அடிக்கடி வைத்திய பரிசோதனை செய்யப் படுகின்றது. இவர்களது உடல் நிலையில் கோளாறு ஒன்றுமில்லை.

இந்த இளம் கணித மேதைகளில்பலர், அருமையான சங்கீத வித்வான்கள். இவர்களது "ஒருமுக வளர்ச்சி"யைப் பற்றி-ஒரு துறை மேதையைப் பற்றி-அபாயம் ஒன்றும் இல்லை.

## மறைந்த பிரிட்டிஷ் பிரதமர்
# வின்ஸ்டன் சர்ச்சில்

சற்றேறக் குறைய ஓர் அறுபது ஆண்டுகளுக்கு பிரிட்டனில் அரசியல் தொண்டாற்றிய சர் வின்ஸ்டன் சர்ச்சில் அவர்களின் பூதவுடல் மறைந்து போய் விட்ட போதிலும் அவருடைய புகழ் உடல் காலவரையின்றி சரித்திரத்தில் இடம் பெற்றுக் கொண்டு விட்டது. சமீப காலத்தில் இவர் ஆற்றிய தொண்டை யாவரும் நன்கு அறிவார்கள் யென்றிருந்த போதிலும் இவர் இளமைப் பருவத்தில் ஆற்றிய தொண்டுகளும், அக்காலத்திய இவரது வரலாறும் சரித்திரக் கதைப் புத்தகத்தில் மறைந்து காட்சியளிக்கின்றன, இவருடைய நீண்ட ஜீவிய காலத்தில் ஈடுபட்ட செயல்பாடுகள் பல பல ஆனபடியால் அவைகள் யாவையும் சுருக்கிக் கூறுவது எளிதல்ல. இவர் சரித்திரப் புகழ் பெற்ற மார்ல்பரௌ பரம்பரையைச் சேர்ந்தவர் என்ற உணர்வுடன் எப்பொழுதும் இருந்து வந்தார். இவருடைய அன்னையார் அமெரிக்கா வாசியானபடியால் இவரை பாதி அமெரிக்கன் என்றும் சொல்லலாம். இளம் பிராயத்தில் இவர் அக்காலத்தில் ஓர் உயர்ந்த குலத்தைச் சேர்ந்தவனுக்குப் பொருத்தமில்லாத பத்திரிகை எழுத்தாளர் தொழிலில் ஈடுபட்டுத் தனக்கு ஊதியம் தேடிக் கொண்டார். பிரிட்டிஷ் தொழிலாளர் சங்கங்கள் இவரை வெகுகாலமாக வெறுத்த போதிலும், ஒரு சமுதாயத் தொண்டர் என்ற புகழை இவர் பெற்றிருப்பது இவரது குணாதிசயங்களில் காணப்படும் பல முரண்பாடுகளுக்கு ஓர் எடுத்துக்காட்டு. இந்தியா, சுதந்திரம் பெறுவதற்கு இவர் ஓர் பெருத்த அளவு தடை செய்த போதிலும் ரூஸ்வெல்ட்டுடன் கூடி 'நான்கு சுதந்திரங்களுக்கு' வழிவகுத்தது மேற்கூறிய குணாதிசயங்களுக்கு மற்றொரு எடுத்துக் காட்டு. இவருடைய ஜீவிய சரித்திரத்தை உற்று நோக்கினால் ஆங்காங்கு இவருடைய காலம் பின்னணியில் பிரதிபலிக்கிறது சர்வசாதாரணம்.

இளமையில் இவரைக் காண்பவர்கள் 'ப்ளென்ஹீம்' அரண்மனையில் செந்நிற சிகைபடைத்த ஒரு சிறிய பையன் தன்னுடைய பிதாவைக்கண்டு அஞ்சி தொலைவில் இருந்து அவருடன் பழகுவதையும், அழகே உருவெடுத்த தன் தாயையும் அவர் தொலைவில் இருந்தே நேசிப்பதையும் காண்பார்கள், இவர் பள்ளி மாணவராக இருந்த காலத்தில் ஒரு சிறப்பு மிக்க மாணவனாக உருவாகவில்லை. ஆனால் இராணுவக் கல்லூரியிலும், இராணுவ விவகாரங்களிலும், இவர் எளிதாகப் புகழ் பெற்றவராகத் திகழ்ந்தார். 1895-ம் ஆண்டில் க்யூபாவில் நடந்த ஒரு போரில் குதிரை வீரனாக இவர் பங்கு கொண்ட பொழுது துப்பாக்கியால் சுடப்பட்டு இவர் வீற்றிருந்த குதிரை கீழே விழுந்து மாண்டது. துப்பாக்கியின் ரவை குறி மாறி இவர் மீது பட்டிருந்தால் பிற்காலத்து பிரிட்டிஷ் சரித்திரத்தில் மாறுதல் ஏற்பட்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இந்தியாவின் எல்லைப் புறத்தில் லெப்டினென்ட் அந்தஸ்து பெற்று, இவர் ஈடுபட்ட வரலாறுகளைத் திரட்டி இவர் நூல் வடிவாகப் பிரசுரித்துள்ளார். இது இவருடைய முதல் நூலாகும். அடுத்த ஆண்டு ஆப்பிரிக்காவில் உள்ள சூடான் தேசத்தில் குதிரை வீரராக இவர் பணியாற்றினார். பின்னர் ஓர் பத்திரிகை நிருபராக போயர் போரைப் பற்றி செய்திகள் திரட்டி வழங்கலானார். போயர்களால் ஒற்றன் என்று பிடித்து, சுட்டுக் கொல்லும் ஒரு சந்தர்ப்பத்திலிருந்து மயிரிழையில் இவர் தப்பித்துக் கொண்டார்.

அடுத்தபடியாக இவர் ஒரு பாராளுமன்ற அரசியல்வாதியாக 20-வது நூற்றாண்டில் காட்சியளிக்கிறார். முதல் உலகப்போர் ஆரம்ப காலத்தில் இவரது நாட்டுத் தொண்டு ஒரு புதிய உருவை எடுக்க ஆரம்பித்தது. 1914-ம் ஆண்டில் அட்மிரால்டியில் முதல்வர் பதவி வகித்துப் போர் துவங்குவதற்கு 5 நாட்களுக்கு முன்பு கப்பல் படைகளை முக்கிய போர்க்களங்களுக்கு அனுப்பி வைத்தது இவருக்கு ஒரு நொடியில் புகழைத் தேடித் தந்தது. அப்பொழுது இவரது வயது 40. ஆனால், பிரிட்டிஷ் கப்பல் படைகளுக்கு டார்டனல்ஸ் என்னும் இடத்தில் கிடைத்த பெருத்த சேதத்தின் விளைவால் இவர் தன் பதவியை ராஜினாமா செய்ய நேரிட்டது. 1918-ம் ஆண்டில் சமாதான உடன்படிக்கை எடுத்துக்கொண்ட பின்னர் இவரை ஒரு பிரகாசமான ராஜதந்திரி என்றும், ஆனால் ஓர் நிலையற்றவர் என்ற பெயரையும் பெற்றார். சமீப காலத்தில் ஐரோப்பாவில் ஹிட்லர், முஸோலினி, ஸ்டாலின் இம்மூவருடைய அதிகாரம் உச்சநிலையில் இருக்கும்போது பிரிட்டனில் ஓர் பெரிய ராஜதந்திரியாக இவர் தலை எடுத்தார். இரண்டாவது உலகப்போர் நடைபெற்றுக் கொண்டிருக்கும்பொழுது 1940-ம் ஆண்டில் பிரிட்டனில் போர் நெருக்கடி நிலைமையும், அதற்கடுத்த ஆண்டு போரில் தீவிரமாகப் பங்கு கொள்ள அமெரிக்கா முன் வந்ததும், இவருடைய ஆட்சியில் குறிப்பிடத்தக்க சம்பவங்கள். 1945-ம் ஆண்டில் நடந்த பொதுத் தேர்தலில் இவருக்கு வெற்றி கிட்டவில்லை யாகையால் இவருக்குக்கிடைத்த நேரங்களை நூல்கள் எழுத இவர் பயன்படுத்திக் கொண்டார். இவர் இயற்றிய 'இரண்டாவது உலகப் போர்' என்னும் நூல் ஓர் சிறந்த படைப்பு. 1951-ல் இருந்து 1955-வரை இவர் மீண்டும் பிரிட்டனின் பிரதமராகப் பணியாற்றினார். அப்பொழுது இவருக்கு வயது 80. பதவியிலிருந்து ஓய்வு எடுத்துக்கொண்ட காலத்தில் ஓவியங்கள் தீட்டி இவர் தன்னுடைய நேரங்களைச் செவ்வனே பயன்படுத்திக் கொண்டார். இவருடைய இறுதிகாலத்தைப்பற்றி ஒருவரும் நூல் வடிவில் எழுதி வெளியிட்டதாகத் தெரியவில்லை. சரித்திரத்துடன் ஒன்றிக் கொண்டு விட்ட ஒருவரைப் பற்றிய வரலாற்றில் ஒரு பகுதியை மட்டும் எடுத்து நூலாக்குவது கடினமானது என்பது யாவரும் ஒப்புக்கொள்ளும் விஷயம்.

## விஷ மருந்துகளால்
# குழந்தைகள் பலி

**கடந்த சில ஆண்டுகளாக உலகம் முழுவதிலும் நஞ்சினால் மரணமடைவோரின் எண்ணிக்கை பயங்கரமான அளவில் பெருகி இருக்கிறது. விஷத்தினால் ஆபத்துக்குள்ளாபவர்களில் 80% பேர் குழந்தைகள். கண்ணில் காணும் பொருளையெல்லாம் கையில் எடுத்து வாயில் வைக்க வேண்டும் என்ற குழந்தைகளின் இயற்கையான உணர்வினால் பெரும்பாலான நஞ்சுணவு நிகழ்ச்சிகள் நிகழ்கின்றன. பெண் குழந்தைகளை விட ஆண் குழந்தைகள்தான் அதிக அளவில் அபாயத்திற்குள்ளாகின்றன. பெற்றோர்கள் குழந்தைகளைச் சற்றுக் கவனமாகக் கண்காணிப்பார்களானால் பெரும்பாலான பரிதாப நிகழ்ச்சிகளைத் தவிர்த்துவிடலாம்.**

சிறு கன்று பயமறியாது. ஓடும் பாம்பைக்கூடக் கையில் பிடித்து விளையாட நினைக்கும் குழந்தைக்கு ஆபத்து என்ன என்பது தெரியாது. கண்ணில் படும் பொருளையெல்லாம் கையிலெடுத்து வாயில் வைத்துக்கொள்வது பயமறியாத பச்சிளங் குழந்தைகளின் இயற்கைச் சுபாவம். வீட்டில் கைக்கு எட்டியதாக இருக்கும் இரசாயனம் மற்றும் விஷ மருந்துகளைக் குழந்தைகள் வாயில் வைத்து விடுகின்றன. இது போன்ற நிகழ்ச்சிகளினால் உலகம் முழுவதிலும் நஞ்சினால் உயிரிழப்போரின் எண்ணிக்கை, முக்கியமாகக் குழந்தைகளின் எண்ணிக்கை அபரிமிதமாகப் பெருகிவிட்டது.

நச்சுப் பொருள்களைக் குழந்தைகள் தெரியாமல் வாயில் வைத்து உயிரிழப்பதற்கு பெரும்பாலும் பெற்றோர்களின் கவனக் குறைவே காரணம். நச்சுப் பொருள்களின் அபாயத் தன்மையைப் பெற்றோர்கள் குறைத்து மதிப்பிடுகிறார்கள். பெரியவர்களை ஒன்றும் செய்யாத சில நச்சுப்பொருள்கள் பச்சிளங் குழந்தைகளின் உயிரை நொடியில் குடித்து விடுவதை அவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை. எனவே, இரசாயனப் பொருள்களையும், விஷ மருந்துகளையும் அவை குழந்தைகளை ஒன்றும் செய்துவிடாது என்ற மெத்தனத்தினால் குழந்தைகளின் கைக்கு எட்டும் இடங்களில் வைத்து விடுகிறார்கள். அவற்றைக் குழந்தைகள் வாயில் வைத்து ஆபத்தில் சிக்குகின்றன. இனிப்புப்பூசிய மருந்து மாத்திரைகளை அளவுக்கு மீறிக் குழந்தைகளுக்குக் கொடுப்பதாலும் பல குழந்தைகள் இறக்கின்றன.

கடந்த சில ஆண்டுகளில் நஞ்சு காரணமாகப் பாதிக்கப்படுவோரின் எண்ணிக்கைப் பயங்கரமான அளவுக்குப் பெருகியுள்ளது. 1939-ல் நஞ்சுணவால் ஆயிரத்திற்கு ஒருவர்தான் இறந்தார். இந்த அளவு 1963-ல் ஆயிரத்திற்கு 19 ஆக உயர்ந்தது. நஞ்சுணவினால் பாதிக்கப்படுவோரில் 80% பேர் குழந்தைகள்; அதிலும் 90% குழந்தைகள் ஏழுவயதுக்குக் குறைந்தவர்கள். நஞ்சுக்கு இரையாகும் குழந்தைகளில் பெண் குழந்தைகளைவிட ஆண் குழந்தைகள்தான் அதிகம். ஆண் குழந்தைகள் அதிகம் துருதுருப்பாக இருப்பதே இதற்குக் காரணம்.

நஞ்சினால் மரணமடையும் பெரியவர்களில் 46% பேர் தவறான மருந்துகளைச் சாப்பிடுவதால் உயிரிழக்கிறார்கள். தூக்கமாத்திரைகளை அதிகம் உண்பதால் 13% பேர் சாகிறார்கள். வலி போக்கும் மருந்துகளினால் 8% பேர் இறக்கிறார்கள். மூக்கியமாக கோஸாலின், பெட்ரோட், மண்ணெண்ணெய், டர்பெண்டைன் முதலிய பொருள்களை உட்கொள்வதால் குழந்தைகள் இறக்கின்றன. குழந்தைகளைக் கண்காணிப்பதில் பெற்றோர்கள் எவ்வளவு கவனமாக இருக்கவேண்டும் என்பதைதான் இந்தப்புள்ளி விவரங்கள் அறிவுறுத்துகின்றன.

நச்சுப் பொருள்களையும், மருந்துகளையும் குழந்தைகளுக்கு எட்டாத இடத்தில் பத்திரமாக பாதுகாத்து வைக்கவேண்டும். சில சமயங்களில் மருந்துகளை வேறு புட்டிகளுக்கு மாற்றுவதனாலும் தவறுதல்கள் ஏற்படுவதுண்டு. எனவே, கூடியமட்டும் மருந்துகளை அவற்றின் அசல் புட்டிகளிலேயே வைப்பது நல்லது. இதுபோன்ற சில அடிப்படை முறைகளைக் கையாண்டால் உயிர்களைக் காப்பாற்ற முடியும்.

---

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

துவத்தைத் திடீரென்று குறைப்பது நம்மை நாமே கெடுத்துக் கொள்ளும் முயற்சியே.

நமது தேசீய ஒருமைப்பாடு ஆங்கிலம் என்னும் சிறிய நூலில் மட்டுமே தொங்கிக் கொண்டிருக்கிற இந்த நேரத்தில் அதையும் வெட்டிவிடுவதோ, (இப்போதைக்கு) அதனினும் அந்நியமாகவே தோன்றுகிற இந்தியைப்பிற இந்திய மொழிக்காரர்கள் மீது கொண்டு இறக்குவதோ, அதை ஏற்காதவர்கள் மீது சீறிப்பாய்வதோ எரியும் தீயில் எண்ணெய் வார்ப்பதைத் தவிர வேறில்லை.

இந்திய மொழிகளில் ஒன்றை ஆட்சிப் பொது மொழி ஆக்குவதற்குரிய சரியான தருணம் இன்னும் வரவில்லை. இப்போதைக்கு ஆங்கிலத்தைப் பயன்படுத்தி நமது ஒற்றுமையைக் கட்டிக்காப்போம்; அகில இந்திய அரசியல் கட்சிகள்—கொள்கைகள் மூலம் அனைத்திந்தியத் தலைமைகளை வலுப்படுத்துவோம்; மக்களைத் தொழில் துறையிலும் கலை—இலக்கியத் துறைகளிலும் வளர்த்து ஒன்று கூட்டி, உணர்ச்சிபூர்வமான ஓர் இந்திய ஒருமைப்பாட்டை உண்டாக்குவோம். இந்த முயற்சிகளின் போதே, அந்தந்த மாநிலங்களிலும் பொதுவிலும்-ஆங்கிலத்தின் ஆட்சிப் பரப்பில் பெரும் பகுதியை அந்தந்த மாநில இந்திய மொழிகள் சிறுகச் சிறுக ஏற்க வழி செய்வோம். தேசீய மொழிப் பிரச்சினை பற்றி அதன் பிறகு சிந்திப்போம்.

இந்தி மக்கள் பெரும்பான்மையானவர்கள். (மக்கட்தொகைப் பெருக்கமும் மற்ற இந்தியப் பகுதிகளை விட இந்திமொழிப் பகுதிகளில் குறைவாக இல்லை.) ஆகையால் அவர்களின் மொழியை எப்போது வேண்டுமானாலும் அவர்கள் ஆட்சிமொழியாகச் செய்து கொள்ளலாம். அவசரப்பட வேண்டியதில்லை. கிணற்றுத் தண்ணீரை வெள்ளம் கொண்டுபோய்விடாது. ஆக்கப் பொறுத்தவர்கள் ஆறப் பொறுக்கவேண்டும். பொறுமை இன்மையால் தேசீய ஒருமைப்பாடு என்னும் பானையையே போட்டு உடைத்துவிடக் கூடாது...

நாளை ஒரு காலம் நாம் ஆட்சிமொழி பற்றிச் சிந்திக்க உட்காரும்போதும் நாம் தெளிவாக இருக்க வேண்டும். 'நமது மொழி' என்ற உணர்ச்சி வேகத்தில் நாம் முடிவு செய்வதானால் இந்திய மொழிகள் அனைத்தையும் மத்திய ஆட்சிமொழிகள் ஆக்க வேண்டும்; எல்லாரையும் திருப்தி செய்ய அது ஒன்றுதான் வழி. அறிவுவழி நின்று, புத்திசாலித்தனமாகக் காரியம் செய்வதானால், நம்மில் யாருக்கும் தாய்மொழி அல்லாத, ஆனால் இங்கும் எங்கும் சிறந்த கருவியாகப் பயன்படக்கூடிய ஆங்கிலத்தையே திட்டவட்டமான வரையறைகளோடு ஆட்சிப் பொதுமொழி என்று ஏற்றுக்கொள்ள வேண்டும். இரண்டும் கெட்டான்களாக இருந்து மேலும் மேலும் குழப்பத்தை ஏற்படுத்திக் கொண்டிருப்பதில் நன்மை இல்லை.

இதெல்லாம் பிறகு வருபவை. இப்போதைக்கு, வட இந்திய அன்பர்களுக்கு நிதானமும் நாவடக்கமும் தேவை; தென்இந்திய ஆட்சியாளருக்கும் பெரியோருக்கும் தெளிவான சிந்தனையும் திட்டவட்டமான முடிவெடுக்கும் தெம்பும்தேவை. ஏனெனில் இன்றைய இந்திய நிலையிலும் உலக நிலையிலும் நமக்குள் ஒற்றுமை மிக மிகத் தேவை.




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

மலர் 30 | 21—2—1965 | வாரம் 13

# நம்பிக்கை உதயம்

ஆட்சி மொழிக் கிளர்ச்சி நாட்டின் தலைவர்கள், அறிஞர்கள், கல்விமான்கள் அனைவரது சித்தனையையும் கவர்ந்திருக்கிறது. கூடிவாழும் குடியுரிமையில் ஒரு சமூகம் பிறிதொன்றை வஞ்சிப்பதாகவோ அடக்கி அடிமை கொள்வதாகவோ சிறிது ஐயப்பாடு தோன்றினும் கூட்டுறவு வலிமை பெருது என்பதை சமீப கால நிகழ்ச்சிகள் காட்டிவிட்டன.

நடைபெற்று ஓய்ந்த கலவரங்களும் விளைந்த தீமைகளும் சமூகம் எப்படிப் புரையோடிப் போயிருக்கிறதென்பதற்குச் சரியான சான்றுகள். அரசாங்கமே அவலமெய்தி நிற்கும்நிலை ஜனநாயகத்துக்காயினும் வேறெந்த நாயகத்துக்காயினும் சிறப்பாகாது. மீண்டும் இப்படியெல்லாம் நிகழாவண்ணம் முன்னெச்சரிக்கையுடன் நடந்து கொள்வது அவசியமாகும்.

பத்திரிகை நிருபர்களின் வினக்களுக்கெல்லாம் விடை சொல்லித்தான் ஆக வேண்டுமென்பது போல அமைச்சர்கள் அல்லது அதிகாரிகள் ராஜ தந்திரமற்ற முறையில் பற்பல கூறியதும் இந்தத் தொல்லைகள் அதிகப்பட ஒரு காரணமாக இருந்தது. பத்திரிகைகள் பரபரப்பான செய்திப்பசியால் அலைந்து கொண்டுதான் இருக்கும். அந்தப்பசிக்குத் தீனிபோட வேண்டிய கடமை யாருக்கும் கிடையாது. பொது நலனுக்கான செய்திகளை அறியப்பத்திரிகைகளுக்குஉரிமையிருக்கிறது. கொந்தளிப்பைப் பெருக்கும் காரியங்களைப் பத்திரிகைகளும் வானெலி அறிக்கைகளும் கூடிச் செய்துள்ளன என்றே தோன்கிறது.

இடையில் அமைச்சர்கள் அவரவரும் தங்களுக்குத் தோன்றிய வண்ணம் கருத்துக்களை வெளியிடுகின்ற பழக்கம் அவ்வளவு நல்லதல்ல. கொள்கை விஷயங்களையெல்லாம் குறிப்பிட்ட பீடங்களே வெளியிடப் பேசுதல் அவசியம். ஏனையோர் ஏதாவது கூறி வைப்பது சிறந்த சுமூகமான சூழ்நிலையை உருவாக்காது.

ஆட்சி மொழிச் சட்டத்தைத் திருத்தியமைப்பதன் மூலம் இந்தி பேசாத ராஜ்யத்து மக்கள் விரும்புகின்ற காலமெல்லாம் ஆங்கிலமும் துணைமொழியாக இருந்து வருமாறு செய்ய எண்ணி அது பற்றிய சட்ட நுட்பங்களைத் தீவிரமாக ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள்.

அரசியல் சாஸனத்தில் பாதுகாப்புப் பெருமல் ஒரு தனிச்சட்டத்தின் மூலம் செய்யப்பெறும் பாதுகாப்பு போதுமானது தானு என்பதையும் சிந்திக்க வேண்டும், ஏனெனில் எந்தச் சட்டமும் அரசியல் சாஸன விளக்கங்களுக்குப் புறம்பானதென்று நீதி மன்றத்தால் மறுக்கப்படக்கூடிய அபாயம் எப்போதும் இருக்கிறது. காலப்போக்கில் பின்னெரு சமயம் மீண்டும் இதே சிக்கல் தோன்ருமல் அணை கோலினுல் தான் உண்மையான பரிகாரம் கிடைத்ததாக ஆகும். இல்லாவிட்டால் தொல்லையை ஒத்திப் போடுவதாகத்தான் இருக்குமேயன்றி, ஒரு வழியாகத் தீர்த்துக் கட்டியதாக ஆகாது.

அமைச்சர்கள் இருவரின் ராஜிநாமாவினுல் ஓரளவு கொந்தளிப்பு அடங்கியது என்பது உண்மை. பொறுப்பில் உள்ளவர்கள் தகுந்த நடவடிக்கைமேற் கொண்டு விட்டார்கள் என்ற நம்பிக்கை தோன்றுவதற்கு அது ஓரளவு பயன்பட்டது. காங்கிரஸ் தலைவர் அறிக்கைகள் விட்டு எதுவும் வெளிப்படையாகக் கூருவிடினும் அவர் சிறந்த ஜனநாயக வாதி யென்பதும், நாட்டின் ஒற்றுமையைக் காப்பதில் தலை சிறந்த தேசிய நோக்குடன் சிந்தித்து வகை செய்வர் என்பதும், மக்களின் அடிப்படையான நம்பிக்கை. எனவே சிறந்த முடிவு ஏற்படுவதற்கு அவர் வழிகாட்டுவார் என்பதில் ஐயமில்லை.

# திராவிடமணி முத்து

***சிவாஜியின் ஆரம்பகால உதவியாசிரியர்களில் ஒருவராகப் பணிபுரிந்தவரும், பின்னர் திராவிடமணி பத்திரிகையாசிரியராக இருந்தவருமான டி. எம். முத்து நோயுற்றிருந்து 18—2—65 ல் காலமானுர் என்று அறிவிக்க வருந்துகிருேம். தமிழ்ப் பத்திரிகைத் துறை வளர்ச்சி பெற்றிராத காலத்தில் அரும்பணி புரிந்து வந்தவர். இங்கிதமான நல்லியல்புகள் கொண்ட பொதுத் தொண்டர். பின்னுல் நம்முடன் கொள்கை வேறுபாடுடையவராயினும் சிவாஜியின்பால் நிறைந்த சிரத்தை காட்டிய அரிய நண்பர். அவருடைய பிரிவுக்கு நமது துயரைப் புலப்படுத்துவதுடன் அவருடைய எண்ணற்ற நண்பர்களுக்கும் குடும்பத்தினர்க்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்களையும் அறிவித்துக் கொள்கிருேம்.***

# தீயணைப்புப் படை

— மனசை ப. கீரன், பி.ஏ., பி. டி.

இரண்டாம் உலகப் பெரும் போர் கடுமையாக நடந்த காலம். எதிரிகள் பகை நாட்டில் தொழிற் கூடங்களிலும் மாளிகைகளிலும் தீ வைப்பதிலேயே கண்ணுக இருந்தார்கள். இந்த அழிவு வேலைக்கு வெடிகுண்டும் கைகொடுத்தது. இந்த ஆபத்துக்கு அணை போடத்தான் நம் நாட்டில் 1941–ஆம் ஆண்டில் தீயணைப்புப் படை பிறந்தது.

ஒவ்வொரு தீயணைப்பு நிலையத்திலும் 42 ஊழியர்கள் உள்ளனர். அவர்கள் இரு அணிகளாக இருந்து இரவும் பகலுமாகப் பணி புரிவர். ஒவ்வொரு நிலையத்திற்கும் ஒரு மேலதிகாரி உள்ளார். இரு மாவட்டங்களில் உள்ள எல்லா தீயணைப்பு நிலையங்கட்கும் மேலாக ஒரு மாவட்டத் தீயணைப்பு அதிகாரி உள்ளார். எல்லோருக்கும் மேலாக ஒரு மாநிலத்தில் காவலர்களின் தலைவரே (Inspector General of Police) தீயணைப்புத் துறைக்கும் தலைவராகத் திகழ்கிருர்.

ஒவ்வொரு தீயணைப்பு நிறுவனத்திலும் மூன்று கருவிகள் உள்ளன. அவை: இயங்கு தீயணைப்பான், நீர் இறைப்பான், ஆம்புலன்சு. தீ பிடித்தபின் அணைப்பதைக் காட்லும் தீ பிடிக்காமல் தடுப்பதே இவர்களின் நோக்கம்.

ஓரிடத்தில் தீ பிடித்ததாகத் தகவல் கிடைத்ததும் விபத்து மணி அடிப்பார்கள். ஊழியர்கள் மணியோசை கேட்ட 20 செகண்டுகளில் இயங்கு தீயணைப்பானை ஓட்டிப் பறந்துவிடுவார்கள். அவ்வாறு செய்யத் தவறுகிறவர்களுக்குப் பதவி உயர்வு கிடைக்காமற் போகலாம். அவர்கள் வேலையிலிருந்தே நீக்கப்படலாம்.

தீயணைப்பு வண்டி சாலையில் செல்லும் பொழுது எச்சரிக்கை மணி ஒலித்துக் கொண்டே இருக்கும். அதைக்கேட்டு, நடப்ப வரும் வண்டிகளும் ஒதுங்கி வழிவிட வேண்டும் என்று எதிர்பார்க்கிருர்கள். என்றுலும் தீயணைப்பு வண்டியோட்டியும் சாலை விதிகளைப் பின்பற்றத்தான் வேண்டும். அவர் வண்டியை மணிக்கு 25 மைல் வேகத்துக்குள்தான் ஓட்ட வேண்டும். அவசரமாகச் செல்ல வேண்டியதால் பெரும்பாலும் இந்த வரம்பைவிட மிகுந்த வேகத்துடன் செல்வதுண்டு. எப்போதேனும் தீயணைப்பு வண்டி வழியில் விபத்துக்கு உட்பட்டால், மற்ற வண்டிகளைப் போல் அங்கேயே நிறுத்தி வைக்க வேண்டிய தேவையில்லை. அது அதிகப் பழுதடையாமல் ஓடும் நிலையில் இருந்தால் ஓட்டிச் சென்று தீயணைப்பு வேலைகளில் ஈடுபடும். தீ விபத்துக்கள் இரண்டு இடங்களில் நடந்ததாகத் தகவல் கிடைத்தால் முதல் இடத்திற்கு இயங்கு தீயணைப்பான் செல்லும்: இரண்டாம் இடத்துக்கு நீர் இறைக்கும் வண்டி போகும்.

தீயணைப்பு வண்டியில் நீண்ட குழாய்கள், ஏணிகள், தண்ணீர்த் தொட்டி ஆகியவை உண்டு. தண்ணீர்த் தொட்டியில் எப்போதும் நீர் நிரப்பி வைத்திருப்பார்கள். அந்தத் தண்ணீர் கால் மணி நேரம் தீயணைக்க உதவும். அது தீருவதற்குள் பக்கத்தில் தண்ணீர் இருக்கும் இடத்தைத் தேடி நீர் இறைக்கும் வண்டி தண்ணீரை இறைத்து உதவ வேண்டும்.

தீயணைப்பானின் மூக்கிலிருந்து பீறிட்டுப் பாய்கின்ற நீரின் அழுத்தம் வியத்தற்குரியது. தென்னை மரத்தின் உச்சியிலுள்ள பச்சைக் குலையை நோக்கி இந்தக் குழாயைப் பிடித்தால் அந்தக் குலையே அறுபட்டு விழுவதைக் காணலாம்! இவ்வளவு அழுத்தத்துடன் பாயும் தண்ணீர்க் குழாயைத் தக்கவாறு பிடித்துத் தீயை அணைக்கத் தனிப் பயிற்சியும் திறமையும் தேவை.

இத்துடன் இணைந்த ஆம்புலன்சின் பணியும் அருமையானதே. இது விபத்துக்கு உள்ளானவர்களுக்கு இலவசமாக உதவுகின்றது; தனிப்பட்ட நோயாளிகளையும் குறைந்த கட்டணத்தில் சுமந்து போகின்றது. நகராட்சி எல்லைக்குள் எங்கேயும் போக இரண்டே ரூபாய்தான் கேட்கிறது. பிற வெளி இடங்களுக்குப் போகவும் மற்றைய வண்டிகளைக் காட்டிலும் குறைந்த கட்டணத்தையே பெறுகின்றது.

தீயணைப்புப் படையின் கடமை தீயை அணைப்பதுடன் முடிவதில்லை. அவர்கள் வேறு விபத்துக்களின் போதும் உதவுகின்றனர். வண்டி விபத்துக்கள், கட்டிடங்கள் சரியும் விபத்துக்கள், மரங்கள் முறிவதாலான விபத்துக்கள், நீரில் மூழ்கி விடும் விபத்துக்கள்போன்ற பற்பல வகையான விபத்துக்களின்போதும் அவர்கள் தோள் கொடுத்துத் துணையாவர்.

விபத்துகள் நாள்தோறும் 24 மணி நேரமும் நிகழ்ந்து கொண்டே இருப்பதில்லை. விபத்து நிகழாதபோதெல்லாம் 42 பேரும் உறங்கிக் கழிப்பதில்லை. அத்தகைய ஓய்வு நேரங்களில் அவர்கள் தரைப் படம் படித்துப் பழகுகிருர்கள்; புருக்களை வளர்க்கிருர்கள்; தோட்ட வேலைகள் செய்கின்றனர்; ஓய்வு நேரத்தைப் பயனுள்ளதாக கழிக்கின்றனர்.

தீ எவ்வாறு ஏற்படுகிறது என்பதை அறிந்தால்தான் தீயை எப்படி அணைப்பது என்பதுவிளங்கும். தீஏற்பட இன்றியமையாத பொருள்கள் மூன்று. அவை எரியக் கூடிய எரிபொருள், வெப்பம், காற்று, இவற்றில் ஏதேனும் ஒன்று இல்லாவிடினும் தீ அணைந்துவிடும். இந்த அடிப்படை உண்மையைக் கொண்டுதான் தீயணைப்புப் படையினர் முப்பொருளில் ஒரு பொருளையேனும் நீக்கித் தீயை அணைக்கின்றனர்.

சோடா அமிலத் தீயணைப்பான் :—அலுவலகச் சுவர்களில் கூம்பு வடிவத்தில் செந்நிறத் தீயணைப்பான்கள் மாட்டப்பட்டிருப்பதைக் காணலாம். இதற்குச் 'சோடா அமிலத் தீயணைப்பான்' என்று பெயர். இதில் சோடியம்-பை-கார்பனேட்டும் கந்தக அமிலமும் தனித்தனியே வைக்கப்பட்டுள்ளன. 2 காலன் (9 லிட்டர்) தண்ணீரும் உள்ளே உள்ளது. சோடியம்-பை-கார்பனேட்டும் கந்தக அமிலமும் கலக்கும்பொழுது தீயை அணைக்கக்கூடிய கரியமிலவாயு ஏராளமாகத் தோன்றும். கருவியின் வெளியே நீட்டியுள்ள ஆணியை இடிக்கும்போது இரு இரசாயனப் பொருள்களும் கலக்குமாறு அமிலமுள்ள சீசா உடையும். அவ்வாறு உடைந்ததும் நன்ருகக் குலுக்கிக் கலந்தால் ஏராளமாகத் தோன்றும் கரியமிலவாயு தண்ணீருடன் 25 அடி உயரம் செல்லுமாறு பீறிட்டுப் பாயும். அதிலுள்ள நீரும், தோன்றும் காற்றும் சுமார் 60 முதல் 90 செகண்டு நேரத்திற்கு வந்துகொண்டேயிருக்கும். கைக்கெட்டாத உயரத்தில் சுமார் 25 அடி உயரம் வரை தோன்றும் கரிந்து போகும் (Carbonising) தீக்களை அணைக்கவே இது பயன்படும்.

நுரை அணைப்பான்-இதில் சோடா-பை-கார்பனேட்டும், அலுமினியம் சல்ஃபேட்டும் உள்ளன. மேற்கண்ட கருவியே போல இதிலும் இரு இரசாயனப் பொருள்களையும் கலக்கச் செய்தால் கரியமலவாயு நிறைந்த ஏராளமான குமிழிகளாலான நுறை பீரிட்டுப் பாயும். எண்ணெயில் தீப்பிடித்தால் இந்த நுரையை எண்ணெய்ப் பரப்பின் மேல் பரவவிட்டு 'நுரைத்திரை' யால் மூடிவிடுவர். நுரையிலுள்ள கரியமல வாயு தீயை அணைக்கும் என்பதுடன் இந்தத் 'திரை' வெளிக் காற்று உள்ளே செல்லாமலும் தடுக்கும்; தீ அணைந்து விடும்.

மின்சார தீயணைப்பான்:— முன்னிரு தீயணைப்பான்களைப் போலவே மின்சாரக் கம்பிகளில் ஏற்படும் தீயை அணைக்கத் தனிவகையான தீயணைப்பான் உண்டு. இதில் ஒரு இரசாயன திரவம் உண்டு. அதைத் தீப்பிடித்த கம்பிகளின் மேல் பீச்சினுல் தீ அணையும். இதைச் சூடான உலோகங்களின் மீது தெளித்தால் 'பாஸ்ஜீன்' என்ற நச்சுக் காற்று தோன்றும். ஆகவே இக்கருவியைச் சூடான உலோகங்கள்மீது செலுத்தக்கூடாது; காற்ருேட்டமில்லாத அடைபட்ட இடங்களில் பயன்படுத்தக் கூடாது. மேலும் மின் தீக்களை அணைப்பதில் பிற தீயணைப்பான்களைப் பயன்படுத்துவது தவறு. முன்னி தீயணைப்பான்களைக் கையாண்டாலோ, அன்றித்

தீயணைப்புவண்டியின் குழாயின் வழியே தண்ணீரைப் பீச்சினுலோ அந்தத் தண்ணீரின் வழியே மின்சாரம் நம் உடலில் பாயும்; அதனுல் நம் உயிர் மாயும்.

குறிப்பிட்ட மூன்று கருவிகளையும் ஒரு முறை பயன்படுத்தினுல் உள்ளிருப்பவைகளை முழுதும் தீர்த்துவிட வேண்டும். பிறகு அவற்றில் போடவேண்டிய இரசாயனப் பொருள்கள் பொட்டலங்களில் கிடைக்கும். அவை ஒரு முறை போட 7 முதல் 15 ரூபாய் வரையில் ஆகும்.

ஓர் அலுவலகம் மாலையில் மூடும் நேரம். ஓர் ஊழியர் புறப்படும் நேரத்தில் புகை பிடித்த கடைசித் துண்டைக் குப்பைக் கூடையில் போட்டுவிட்டு வீட்டிற்குப் போய்விட்டார். அங்கிருந்த காவல்காரர் கூடை புகைவதைப் பார்த்துவிட்டார். அவர் தண்ணீரைத் தேடி வெளியில் எங்கெங்கோ அலைந்துகொண்டு வந்தார். வந்து பார்த்தபோது தீ மூண்டெழுந்து அலுவலகத்தைச் சூழ்ந்துகொண்டது. அவ்வூழியர் குப்பைக் கூடையைமட்டும் அகற்றி விட்டிருக்கலாம்; தண்ணீருக்குத் தேவையேயில்லை.

ஒரு மருத்துவ மனையின் அருகில் ஒரு குடிசை தீப்பிடித்துக்கொண்டது, மருத்துவ மனையிலிருந்த ஆண் நர்சு தொண்டு மனம் கொண்டவர். அவர் மருத்துவ மனைச் சுவரில் இருந்த தீயணைப்பானை எடுத்து வந்து தீப்பற்றி எரிந்த குடிசையின்மீது வீசி எறிந்தார். தீ அணைந்துவிடும் என்று எதிர்பார்த்தார்; தீ அணையவில்லை. சிறிதாய் இருந்த தீ பெரிதாய் வளர்ந்தது. பிறகு தீயணைப்புப் படையினர்தான் வந்து தீயை அணைக்க நேர்ந்தது. தீ அணைத்து முடிந்தபோது சாம்பலின் இடையில் கருகிய நிலையில் தீயணைப்பான் கிடந்தது. கேட்டபோது ஆண் நர்சு தாம் செய்ததைச் சொன்னுர், அவர் அதைப் பயன்படுத்தும் முறையினை அறிந்திருந்தால் தீயும் முதலிலேயே அணைந்திருக்கும்; தீயணைப்பானும் கெட்டிருக்காது.

ஈரோட்டுப் பக்கம் நடந்தது இது: தொலைபேசி வைத்திருந்த ஒரு பெரு நிலக்கிழாரிடம் பக்கத்துக் கிராமக் குடியானவர்கள் ஓடோடியும் வந்தார்கள். தமது கரும்புத் தோட்டத்தில் தீ பரவுவதைத் தீயணைப்புப் படையினருக்குத் தொலைபேசி வழியே தெரிவிக்கக் கூறினர். அச்செல்வரோ, எங்கே பிடித்தது? அதிகச் சேதமோ? ஆடு, மாடு தீயில் சிக்கவில்லையே? உயிருக்கு ஆபத்தில்லையே?...' என்பதைப்போலக் கேள்விகள் பல கேட்டு 5 நிமிடம் கழித்தார். பிறகுதான் தீயணைப்புப் படையினரை அழைத்தார். தீயணைப்புப் படையினர் வருமுன் கரும்புத் தோட்டம் கரியாகியிருந்தது. அவர் முதலில் தகவல் கொடுத்துவிட்டுப் பிறகு எல்லாம் கேட்டிருக்கலாம்.

அடுத்து வருபவர் ஓர் இரயில்வே அதிகாரி. அவரை அணுகி இதைப் போலவே ஒருவர் தீப்பிடித்த தகவலைத் தீயணைப்பு நிலையத்திற்குத் தரக்கோரினுர். 'சரி' என்ற அதிகாரி ஒரு போர்ட்டரிடம் சீட்டெழுதி அனுப்பினுர். போர்ட்டரோ வழியில் தேநீர் அருந்தி ஓய்வாகச் சென்று தீயணைப்பு நிலையத்தில் தந்தான். சீட்டைக் கண்டதும்படை பறந்தது. அப்போதுதான் 'போர்ட்டரு' க்குத் தான் செய்த தவறு தெரிந்தது. இரயில்வே அதிகாரி தம் மேசை மேலுள்ள தொலைபேசி வழியே தகவல் கொடுத்திருக்கலாம்,

ஆகவே தீயணைப்பில் வேண்டிய மூன்று பண்புகள் இவை: விபத்து நடந்தாலும் பதருமல் அமைதியாகச் செயபடல்வேண்டும்; தீயை அணைக்கச் சூழ்நிலைக்கேற்ற தீர்வு வழிகளைக் காண வேண்டும்! விரைந்து செயற்பட வேண்டும்.

தீயை அணைப்பதும் அல்லாமல் பிற விபத்துக்களிலும் கைகொடுப்பதால் 'தீயணைப்புப் படையினர்' 'ஆபத்தில் அருந்துணைவர்' என்பதை அறிந்து போற்ற வேண்டும். நாம் பதருமல் விரைந்து தீர்வு கண்டு செயல்பட வேண்டும். காலங்கடந்த பின் அறிவித்துச் 'சாம்பலை அணைக்கவா வந்தீர்கள்?' எனக் கேட்கும் நிலைக்கு நாமும் காலம் தாழ்த்தாமல் உடனே செய்தியைத் தெரிவித்து அவர்கள் தம் கடமையைக் காலத்தே புரிவதற்கு வாய்ப்புத் தருவதும், எளிய தீயணைப்பான்களைப் பயன்படுத்தும் முறையை அறிந்திருப்பதும் நமது கடமையாகும்.

:-குத்தூசி

(தகவல்: திரு. நித்தியானந்தம், மாவட்டத் தீயணைப்பு அதிகாரி, கடலூர்.)

## ஆங்கிலம் நீடிக்க

மத்ய சர்க்காரின் அலுவல்களில் ஆங்கிலம் நீடிக்க வகைசெய்ய ஆட்சிமொழிச் சட்டத்திற்கு திருத்தம் கொண்டுவர நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது.

இந்தி வழங்காத ராஜ்யங்களின் முதலமைச்சர்களுக்கு நகல் மசோதா அனுப்பப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இந்தி வழங்காத மாநிலங்களில் முக்கால் வாசிச் சட்டசபைகளும் விரும்பினுல் தான் ஆங்கிலம் நீடிக்கப்படும் என்று இந்த மசோதாவில் ஒரு ஷரத்து இடம்பெற்றுள்ளது. சென்னை, ஆந்திரம், மைசூர் ராஜ்ய முதலமைச்சருக்கு இந்த நகலை காங்கிரஸ் அக்கிராசனர் அனுப்பியுள்ளார், மேல் வங்க முதலமைச்சர்களுக்கு, இத் திருத்தத்தைத் தயாரித்துள்ள சட்டமந்திரி சென் அனுப்பியுள்ளார்.

திருத்த வாசகத்துக்கு முதலமைச்சர்கள் இணங்கினுல் பார்லிமெண்ட் நடைமுதல் கூட்டத் தொடரிலே இது கொண்டு வரப்படும். டில்லியிலுள்ள பெருந் தலைவர்கள் இந்த வாசகத்துக்கு சம்மதம் கதரிவித்து விட்டார். காங்கிரஸ் பார்லிமெண்ட் கட்சியும் இதன் மீது கருத்தை அறிவிக்க சந்தர்ப்பம் கொடுக்கப்படும்.

## சென்னை முதலமைச்சர்

தமக்கு இன்னமும் இந்த நகல் மசோதா வந்து சேரவில்லையென்றும், முக்கால் வாசி ராஜ்யங்கள் விரும்பினுல் தவிர ஆங்கிலம் நீக்கப்படமாட்டாது என்றுள்ள ஏற்பாட்டைத் தாம் ஏற்கவியலாதென்றும், ஒரு ராஜ்யம்விரும்பினுலும் ஆங்கிலம் நீடிக்க வேண்டுமென்பதே தமது கருத்தென்றும் சென்னை முதலமைச்சர் கூறியிருக்கிருர்.

## தமிழ் உறவு நூல் 2-ம் வரிசை

தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் ஏற்கனவே முதல்வரிசையாக 5 நூல்களை வெளியிட்டது. இப்பொழுது அடுத்த வரிசையாக 5 நூல்களை வெளியிட்டிருக்கிருர்கள். அவை யாவன :- கி. வா ஜ எழுதியுள்ள 'கற்பக மலர்' மாயாவியின் 'மின்னல்', லட்சுமி சுப்ரமண்யத்தின் 'அருளின் ஒளி', கல்வி கோபால கிருஷ்ணனின் 'சந்திரனுக்குச் செல்வோம்', மற்றும் சங்கமே தயாரித்துள்ள 'கம்பன் மலர்'.

மைலாப்பூர் உட்லண்ஸ் கட்டிடத்தில் இந்த வெளியீட்டு விழா நடைபெற்றது. தொழிலமைச்சர் ஆர். வெங்கட்ராமன் இவற்றை வெளியிட்டார். படித்த மக்களின் எண்ணிக்கை பெருகும் போது நூல்களையும் பத்திரிகைகளையும் படிக்கும் ஆர்வமும் பெருகி வருகிறது. அவர்களுக்கு அறிவும் பண்பும் சுவையும் தரக்கூடிய நல்ல வெளியீடுகள் வராவிட்டால் மக்கள் கண்டதைப் படித்து சமூக ஒழுக்கத் தரம் குன்றிவிடும். அதிகவிற்பனையுடன் தரமும் உடையனவாக நூல்கள் வெளியிட வேண்டும். சமூக நியதியையும் அமைதியையும் காக்கும் கட்டுப்பாட்டுணர்ச்சியுடன் நடந்து கொள்ளும் இயல்பான உணர்ச்சி மக்களிடம் மலருவது தான் நாட்டில் அறிவு வளர்வதற்கு அறிகுறி அது தான் ஜனநாயகத்தின் வெற்றி—இவ்வாறு அமைச்சர் கூறினுர்.

கூட்டுறவு அமைச்சர் மன்ருடியார் விழாவுக்குத் தலைமை வகித்தார். கூட்டுறவு முறையில் எழுத்தாளர் நூல்கள் வெளியிடும் முயற்சி வெற்றியடைந்து வருவதை அவர் பாராட்டியதுடன் அரசாங்கம் வேண்டிய உதவிகளைச் செய்யுமென்றும் வாக்களித்தார். செங்கற்பட்டு மாவட்ட நூலக ஆணைக் குழுத் தலைவர் இந்த வெளியீடுகளை முதலில் வாங்கிச் சிறப்பித்தார்.

## திண்டிவனம் டி. மு. கோ.
O.S. 177/63

மாணிக்கக்கவுண்டர் வகையரு —வாதிகள்
முருகேசன் வகையரு —பிரதிவாதிகள்.

ஷ நெம்பரில் முருகேசன் வகையரு பேரிலும் இன்னும் இதர பிரதிவாதிகளாகிய பெருமாள், காளி, ராசு, சுப்பராயன், கிளியாம்பாள், உத்திராம்பாள் ஆகியோர் பேரிலும் சொத்துவரப்பற்ற செய்த தாவா 3—3—65-ல் ஈரங்கி அன்று காலை 10 மணிக்கு கோர்ட்டில் ஆக்ஷேபணையை தெரிவிக்காவிடில் எஸ்க்பார்ட்டியாக தீர்ப்பு செய்யப்படும்.

A. திருநீலக்கண்டர்,
6/6504/135 அட்வகேட்.

## பத்திரிகை சுதந்திரம்

பத்திரிகை சுதந்திரத்தில் தலையிடுபவர் எவராயிருப்பினும் (அது சர்க்காராக கூட இருப்பினும்) அதுபற்றி பத்திரிகை கௌன்சில் விசாரிக்க அதிகாரமிருக்க வேண்டும் என பத்திரிகை கௌன்சில் மசோதா பற்றி ஆராய்ந்த பார்லிமெண்ட் கூட்டு கமிட்டி தெரிவித்துள்ளது. அக்கூட்டுக் கமிட்டியின் அறிக்கை பார்லிமெண்டில் சமர்ப்பிக்கப் பட்டது. மசோதாவில் கௌன்சிலின் அதிகாரம் பற்றிய 13-வது பிரிவையே கூட்டுக்கமிட்டி அதிகம் மாற்றி சிபார்சு செய்துள்ளது.

சர்க்கார் தலையிட்டது பற்றி புகார் வந்தால் பத்திரிகை கௌன்சில் தனதுவிசாரணைக்குப் பின்னர் சர்க்காருக்கு அறிக்கைமட்டும் அனுப்பும் என்று கூட்டு கமிட்டி தெரிவித்தது. மற்றவர் விஷயத்தில் தொடர்பான நபர் பத்திரிகையாளர் பத்திரிகை ஆசிரியர் பத்திரிகை ஆகிய எதுவானுலும் விசாரணையில் வாக்குமூலம் விளக்கம் கோரி பின் கண்டனத்தை எழுத்து மூலம் கௌன்சில் சமர்ப்பிக்க வேண்டுவது கட்டாயமாகும். ஒரே நபர் அல்லது பத்திரிகை மீது ஒரு தடவைக்கு மேலும் புகார் வருமானுல் அதுபற்றிய விசாரணை அறிக்கையை மத்திய சர்க்காருக்கு கௌன்சில் தெரிவிக்க வேண்டியதில்லை என கூட்டு கமிட்டி கூறியுள்ளது.

சங்கிலி பத்திரிகைகள் கூட்டான பத்திரிகைகள் விஷயத்தில் கௌன்சிலில் ஓர் இடம் அளித்தால் போதும்என கூட்டுக் கமிட்டி தெரிவித்துள்ளது

பத்திரிகைகள் செய்தி ஸ்தாபனங்களுக்கு வெளிநாட்டு உறவுகள் மூலம் கிடைக்கும் எந்த உதவியையும்பத்திரிகை கௌன்சில் கவனித்து கொள்ள வேண்டுமெனவும் அது தெரிவித்துள்ளது.

பத்திரிகை கௌன்சில் தலைவரை சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி நியமிக்க வேண்டும். அந்தத் தலைவர் சம்பளம் வாங்கும் முழுநேர சேவை செய்யும் அதிகாரியாக இருக்க வேண்டும். கௌன்சில் மெம்பர்கள் 6 ஆண்டுகளுக்கு மேல் பதவி வகிக்கக் கூடாது. மொத்தம் 25 மெம்பர்களில் மூன்றுபேர் கல்வி இலக்கியம் சட்டம் பண்பாடு தவிர விஞ்ஞானத்திலும் விசேஷ ஞானம் பெற்றவராக இருக்க வேண்டும் என கூட்டுக் கமிட்டி சிபார்சு செய்துள்ளது.

ஸ்ரீமான்கள் ஏ. டி. மணி வாஜ்பாய் கபூர்சிங் எல். எம். சிங்வி கே. சி. சர்மா ஆகியோர் மேற்படி சில திருத்த யோசனைகளைத் தெரிவித்தனர்.

—★—

# வீடில்லாதவர் விடுதி

**நேர்மையான வாழ்க்கையிலிருந்து தவறிக் குற்றவழிகளில் வாழ்க்கை நடத்தும் ஆண்களுக்கும், பெண்களுக்கும் 'புகலிடம்' அளிப்பதற்காக மேற்கு ஜெர்மனியில் 'விடுதி' ஒன்று நடத்தப்படுகிறது. சகோதரி பெர்த்தா கெய்ஸர் என்ற பெண்மணி தனது சொந்த முயற்சியினல் 50 ஆண்டுகளுக்கு முன் இந்த விடுதியை நிறுவினர். சந்தர்ப்பம் சூழ்நிலையினல் தவருன வழியில் செல்லும் குற்றவாளிகளை அன்பாலும் ஆதரவாலும் நல்வழியில் திருப்ப முடியும் என்பதை நிரூபித்த சகோதரி கெய்ஸர் சமீபத்தில் தனது 96-வது வயதில் காலமானர்.**

மேற்கு ஜெர்மனியிலுள்ள ஹாம்பர்க் மாநிலத்தில் 'புனிதபால்' என்ற மாவட்டம் குற்றங்களுக்குப் பிரபலமானது. 'உல்லாச மாவட்டம்' என்று உலகப் பிரசித்தி பெற்ற இந்த மாவட்டத்தில் நன்னடத்தை என்பதை அரிதாகவே காண முடியும். திருடர்கள், கொள்ளேயர்கள், போக்கிரிகள், கடத்தல்காரர்கள் ஆகிய குற்றவாளிகளின் இருப்பிடமாக இந்தப் பகுதி பிரபலமடைந்திருக்கிறது. இங்கு வாழ்க்கை நெறி தவறி, குற்றம் செய்வதையே தொழிலாகக் கொண்ட கொடிய மனம் படைத்தவர்கள் அனைவரும் ஒருமனதாக தெய்வம்போல் மதித்துப்போற்றிவந்த 'அன்புத்தேவதை' அண்மையில் தனது 96-வது வயதில் காலமானர். அவர் பெயர் சகோதரி பர்த்தா கெய்ஸர் என்பதாகும். கொலை பாதகங்களுக்கு அஞ்சாத கல்நெஞ்சர்கள் கூட இந்த மூதாட்டியின் சடலத்தில் விழுந்து கதறி அழுத காட்சி உள்ளம் நெக்குருகுவதாக இருந்தது.

'சகோதரி' என்று எல்லோராலும் அன்புடன் அழைக்கப்பட்டுவந்த பர்த்தா கெய்ஸர் குற்றவாளிகளைச் சீர்திருத்தும் அறப்பணிக்காகத் தன் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்ட 'தர்மதேவதை'. 'குற்றவாளிகள் அனைவரும் பிறக்கும்போதே குற்றவாளிகளாகப் பிறப்பதில்லை. சந்தர்ப்பம் சூழ்நிலையால் சிலர் திருடுகிருர்கள்; சிலர் ஏமாற்றுகிருர்கள்; போக்கிரிகளாக மாறுகின்றனர் சிலர். இவர்களை அன்பாலும் ஆதரவாலும் துன்மார்க்கத்திலிருந்து சன்மார்க்கத்திற்குத் திருப்பமுடியும்' என்பதில் கெய்ஸருக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. எனவே நெறிதவறியவர்களைத் திருத்துவதற்குச் சிறந்த வழி என்ன என்பதைச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்தார். இவர்களுக்குத் தங்கவும், சாப்பிடவும் ஒரு விடுதி நிறுவ முடிவு செய்தார். பல குற்றவாளிகளுக்கு விடு வாசல் கிடையாது; சாப்பிடவும் வசதி இல்லை. இதனுலேயே அவர்கள் திருடுகிருர்கள்; குற்றம் புரிகிருர்கள். இவர்களுக்குச் சங்கடமில்லாமல் தங்க வசதியும், உணவும் கொடுத்தால் ஒரு வேளை அவர்கள் மனந்திருந்தி நல்வழிக்குத் திரும்பலாம் என்று எண்ணி விடுதியைத் தொடங்கினர். இதற்கு 'வீடில்லாதவர் விடுதி' எனப் பெயர் சூட்டினர்.

இந்த விடுதியை நடத்துவதற்கு நிதி திரட்டுவதற்கு கெய்ஸர் பட்டபாடு சொல்லி முடியாது. சில சமயங்களில் பிச்சை எடுத்து நிதி திரட்டினர். அதனல் கிடைத்த நிதியைக் கொண்டு விடுதிவாசிகளுக்கு இலவசமாக உணவும், உடையும் அளித்தார். குற்றவாளிகளின் மத்தியில் இந்த விடுதி பிரபலமடைந்தது. இலவசமாகச் சாப்பிடவும், இரவில் தங்கிச் செல்லவும் ஏராளமான குற்றவாளிகள் இங்கு வந்தார்கள். அவர்களை அன்புடன் வரவேற்று, ஆதரவாகப் பேசி அவர்களுக்கு வேண்டிய வசதிகளைக் கொடுப்பார் கெய்ஸர். இரவு நேரங்களில் விடுதிக்கு வரும் அனைவரையும் ஒன்று கூட்டி பிரார்த்தனை நடத்துவார். அவர்களுக்கு பல நற்போதனைகளைச் செய்வார். குற்றங்கள் புரிவதனுல் ஏற்படும் தீமைகளை எடுத்துக் கூறுவார். அவரது போதனைகள் நற்பலன் அளிக்காமல் போகவில்லை. ஏராளமானவர்கள் மனம் மாறி, நேர்வழியில் ஏதாவது ஒரு வேலை செய்து பிழைக்க விரும்புவதாகச் சகோதரியிடம்கூறுவார்கள். அவர்களுக்கு வேண்டிய ஆலோசனைகள் கூறி வேலை கிடைக்க உதவியும் செய்வார் கெய்ஸர்.

உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்பவர்களும் இங்கு வருவதுண்டு. ஒரு சமயம் சகோதரி கெய்ஸரிடம் உணவு கேட்டுவந்த ஒரு போக்கிரி, சாப்பிட்டவுடன், ஒரு மதுபானப் புட்டியினல் கெய்ஸரின் மண்டையில் அடித்து அவரிடமிருந்த பணப்பையைத் திருடிச் சென்று விட்டான். இறுதியில் அவனைப் போலீஸார் பிடித்து விட்டனர். அந்தப் போக்கிரியை நீதிமன்றத்திலேயே சகோதரி மன்னித்து அவனை மீண்டும் விடுதிக்கு வருமாறு அழைத்தார்.

பலவிதமான தொல்லைகளுக்கு மத்தியில் 50 ஆண்டுகளுக்கு முன்னர் கெய்ஸர் தொடங்கிய இந்த விடுதி இன்று மிகச் சிறந்த அறப்பணி ஸ்தாபனமாகத் திகழ்கிறது. முதலில் நன்கொடைகள் வழங்க மறுத்தவர்கள் இப்போது ஏராளமாக நன்கொடை வழங்கி வருகிருர்கள். அரசாங்கமும் இதற்கு மானியம் வழங்குகிறது. இந்த விடுதியில் இப்பொழுது நாள்தோறும் குறைந்தது 500 பேர் வந்து உண்டும் உறங்கியும் செல்கிருர்கள். இப்படி வருபவர்களில் ஆண் பெண் இருபாலரும் உள்ளனர். திருமணமாகாமல் குழந்தை பெற்ற தாய்மார்கள், வீட்டைவிட்டு ஓடிய பெண்கள், இளைஞர்கள், ஜெர்மனிக்கு வேலை தேடி வந்து விரும்பிய வேலை கிடைக்காமல் திண்டாடும் வெளிநாட்டுக்காரர்கள், போக்கிரிகள், மோசடிக்காரர்கள், திருடர்கள் ஆகியோருக்கு இங்கு புகலிடம் கிடைத்து வருகிறது.







அரியலூர் டி. மு. கோ.
O. S. 879/64

சின்னசாமி —வாதி
பெரியசாமி படையாச்சி —பிரதிவாதி

ஷை நெம்பரில் சண்முக படையாச்சிக்கு நீர் 27—11—61ல் ரூ 450க்கு எழுதிக் கொடுத்த பிராமீசரி நோட்டை ஷை வாதி மேடோவர் பெற்று உமது பேரில் ரூ. 527-77க்கு தாவா செய்து ஓட்டி சார்வு சம்மனுக்கு உத்திரவாகி 23—2—65ல் ஈரங்கி.

R. ராமசாமி,
2/6500/133 அட்வகேட்.

மாஸ்கோவில்

## குரங்குகள்!

மாஸ்கோ பகுதியிலுள்ள ருஷ்யக் காடுகளில், மாரிக் காலத்தில், வெப்பம் 20 டிகிரி சென்டிகிரேடுக்கும் குறைவாகவே இருக்கும். இந்தப் பருவநிலையையும் சமாளிக்கப் பழகி விட்டன குரங்குகள்!

குரங்குக் குட்டிகளை நான்கு ஆண்டுகள் பரிசோதித்தபிறகு, அவை எந்தப்பருவ நிலையையும் தாங்கிக் கொள்ளும் என்ற முடிவுக்கு வந்துள்ளனர் விஞ்ஞானிகள்.

கோடைகாலத்தில், அந்தக் குரங்குக் குட்டிகள் தடித்துக் கொழுத்தன; சுறுசுறுப்பு இல்லாமல் மந்தகதியடைந்தன.

மாரிகாலத்தில், அவை பந்துபோல் சுருண்டுகிடந்தன. அவற்றின் உடம்பெல்லாம் ரோமம் வளர்ந்து, சடைபிடித்து, அவை மலைக் குரங்கு போல் ஆகிவிட்டன! ஆனல், அவைகளால் தமது வாலை ஆட்ட முடியவில்லை; அது மரத்துப் போய் விட்டது! தெற்கு ஆசியாவிலிருந்தும், கிழக்கு ஆப்பிரிக்காவிலிருந்தும் மாஸ்கோ ஆராய்ச்சிக் கூடங்களுக்குக் கொண்டுவரப்பட்ட குரங்குகள் தொல்லை தருவதில் சிறந்தவை!

வெப்பமுள்ள இடங்களில் வைக்கப் பட்டிருந்தாலும், அவை அடிக்கடி உயிர் நீத்து வந்தன.

இதற்குப் பரிகாரம் காணவே, விஞ்ஞானிகள் ஆராய்ச்சி தொடங்கினர். பருவ நிலைக் கேற்ப குரங்குகள் தங்களை மாற்றிக் கொள்ள சாதகமான வழிகளைக் கண்டனர். முதன் முதலில், ஜூலை முதல் டிசம்பர் மாதம் வரை, சிறிய மரக் கூண்டுகளில் அவற்றை அடைத்து வைத்தனர். வெப்பநிலை பூஜ்யத்திற்கு கீழே 17 டிகிரி சென்ற பின்னர், அவை உஷ்ணமுள்ள கூண்டுகளில் அடைக்கப்பட்டன. இச்சோதனையில், எல்லா குரங்குகளும் பிழைத்திருந்தன.

சென்ற ஆண்டில், கூண்டுகளோ, மூடிகளோ எதுவுமின்றி ஒரு காட்டில் பல குரங்குகள் விடப்பட்டன. இந்தப் புதிய சூழ்நிலை அவற்றுக்குப் பழக்கமாகி விட்டது. அவை ருஷ்ய பிர்ச் மரங்களில் துள்ளி விளையாடத் துவங்கின!

மாஸ்கோ பிரதேசகுரங்குகளைக் குறித்த பரிசோதனையில் மாபெரும் வெற்றி கிடைத்தது.

## சத்தியம் வெல்லும் நம்பிடம்மா!

ஓங்கும் பனிமலைக் குளிரினிலே
உயரும் பாரத வீரனிவன்
ஏங்கும் நெஞ்சகக் குரலினைநீர்
கேட்டுப் பாரீர் தோழர்களே!

நானோர் இந்தியப் படைவீரன்
நாட்டைக் காக்கும் போர்மறவன்!
வானோர் காணு மலைமுகட்டைச்
சார்ந்து தாயைக் காக்கின்றேன்!

அண்டை நாடே! சீனுவே!
அன்புக் கரத்தை வெறுத்தாயே!
அண்ணல் சீலக் கொள்கையினை
அசட்டை செய்தே விட்டாயே!

என்றும் அமைதி வழியினிலே
செல்லும் எங்கள் உயர்உள்ளம்
கன்றும் எனநீ எண்ணவில்லை
கனலைக் கிளறி எரிக்கவிட்டாய்!

மக்கள் ஆட்சி கண்டிட்டோ
மகிழ்ச்சி வெள்ளம் பார்த்திட்டோ
கக்கும் எரிமலை எண்ணுமல்
கண்ணை மூடி வந்திட்டாய்!

இழந்தோம் முன்னர் உரிமையெல்லாம்
இழக்க மீண்டும் பொறுவில்லை!
சழக்க னேநீ சென்றுவிடு!
சாவை நோக்கி நடந்துவிடு!

எங்கள் இமய மலைத்தாயே!
வீரத் தேவீ! வாழ்த்திடம்மா!
எந்தன் உள்ளத் தனல்பறக்க
எங்கே சீனன்? எனஎழுந்தேன்!

எழுந்த எந்தன் எதிரினிலே
படையின் தலைவர் வந்துசொன்னர்
இழக்க வேண்டாம் உணர்ச்சியினை
விரைவில் செல்வோம் பகைநோக்கி!

காத்து நின்றேம் கட்டளைக்கே
கால வெள்ளம் ஓடிற்றம்மா!
பார்த்துப் பார்த்து வழிநின்றேம்
பஞ்சைப் பயலும் பறந்துவிட்டான்!

இந்நாள் நானிங் கிருக்கின்றேன்
எப்போ சீனன் வந்திடுவான்?
வந்தால் இனிநாம் விடுவோமோ?
வாரிச் சுருட்டிக் கொள்வோமே!

இந்திய நாடே எம்தாயே!
எங்கள் உணர்ச்சி உன்மூச்சு!
சத்தியம் இதைநீ உணர்ந்துவிடு!
சத்தியம் வெல்லும் நம்பிடம்மா!

- கோ. சண்முகன்

## தபால் நிலைய சேமிப்பு பாங்கு

தபால் நிலைய சேமிப்பு பாங்கு இந்நாட்டில், மாபெரும் சேமிப்பு நிறுவனமாக தன்னிகரற்று விளங்குகிறது. நாடு முழுவதிலும் கிட்டத்தட்ட 42,500 தபால் நிலையங்கள் பணியாற்றி வருகின்றன. இவற்றில், 34 ஆயிரத்துக்கும் மேலான தபால் நிலையங்கள் கிராமப் பகுதிகளில் அமைந்துள்ளன. இந்த அளவில் ஏராளமான கிளைகளைக் கொண்ட சேமிப்பு ஸ்தாபனம் எதுவும் கிடையாது; அத்துடன், தபால் நிலையங்களைப் போல் கிராமங்களில் பணியாற்றும் ஸ்தாபனமும் இல்லை. தபால் நிலைய சேமிப்பு பாங்குக்கு மக்கள் அளிக்கும் பேராதரவு அளவிடற்கரியது.

தபால் நிலைய சேமிப்பு பாங்கில் போடப்பட்டிருந்த டெபாசிட்டுகளின் மொத்த தொகை, 1964 மார்ச் 31-ந் தேதியன்று, 530 கோடி ரூபாயாகும். ஆனால், அதே தேதியில், எல்லா ஷெட்யூல்டு பாங்குகளிலும் சேமிப்புப்பிரிவில்செலுத்தப்பட்டிருந்த தொகை 479 கோடி ரூபாயே ஆகும். 1964 மார்ச் 31-ந் தேதியன்று, தபால் நிலைய சேமிப்பு பாங்கிலிருந்த மொத்த டெபாசிட்டுகளும், தபால் சேமிப்புப் பத்திரங்கள் மூலம் பெறப்பட்ட டெபாசிட்டுகளும் மொத்தம் 1,134 கோடு ரூபாயாகும். இந்தத் தொகை, எல்லா ஷெட்யூல்டு பாங்குகளிலும் 1964 ஏப்ரல் முதல் தேதியன்று இருந்த டெபாசிட்டுத் தொகையில் சுமார் பாதியாகும்.

நாட்டில், ஷெட்யூல்டு பாங்குகளைக் காட்டிலும் மிக அதிகமான தபால் நிலைய சேமிப்பு பாங்குகள் இருக்கின்றன. 1964 மார்ச் 31-ந் தேதியன்று, தலைமை, துணை, கிளை, தபால் நிலைய சேமிப்பு பாங்குகள் மொத்தம் 42,594 இருந்தன. ஆனால், ஷெட்யூல்டு பாங்குகளும், அவற்றின் கிளைகளுமாக நாட்டில் மொத்தம் 5,128 பாங்குகளே இருந்தன. கடந்த பத்தாண்டுக் காலத்தில் டெபாசிட்டுகளின் தொகையும் அதிகரித்து வந்துள்ளது. 1949-50-ம் ஆண்டில் ரூ 89 கோடி டெபாசிட் செய்யப்பட்டது. 1963-64-ல் டெபாசிட்டுகளின் தொகை ரூ 265 கோடியாக உயர்ந்தது. 1949-50-ம் ஆண்டின் இறுதியில் இருந்த நிலுவைத் தொகை ரூ 169 கோடி. இது 1963-64-ம் வருட இறுதியில் மூன்று மடங்காக அதிகரித்திருந்தது. தபால் சேமிப்புப் பத்திரங்கள் விஷயத்திலும், இதே போன்று உயர்வு காணப்பட்டது. 1963-64-ல் இந்த முதலீடு 109 கோடி ரூபாய்க்கு உயர்ந்தது. தபால் சேமிப்புப் பாங்குகளில் நிதி செலுத்தியவர்களின் எண்ணிக்கையும் இந்தக் காலத்தில் அதிகரித்து வந்துள்ளது. 1909-10-ம் ஆண்டில் டெபாசிட் செய்தவர்கள், 13,79,000 பேர். 1947-48-ல் இந்த எண்ணிக்கை 31,53,000 ஆக அதிகரித்து இருந்தது. 1963-64-ம் ஆண்டில் ஒரு கோடிக்கும் அதிகமானவர் டெபாசிட் செய்திருந்தனர்.

சுதந்திரம் பெற்ற பிறகு முதல் 16 ஆண்டு காலத்தில் டெபாசிட் செய்தவர்களின் எண்ணிக்கை 200 சதவிகிதம் அதிகரித்தது. அதே காலத்தில் செய்யப்பட்ட டெபாசிட்டுகள் சுமார் 180 சதவிகிதம் அதிகரித்தன என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

தபால் தந்தி இலாகா நாட்டில் சேமிப்பு மனப்பான்மையை வளர்த்து, எல்லா மட்டங்களிலும் மூலதனம் உருவாக உதவி வருகிறது. ஷெட்யூல்டு பாங்கிகள், கிராமங்களில் கிளைகளை அமைக்கத் தயங்குகின்றன; கணிசமான லாபம் பெற முடியாது என்பதே இதற்குக் காரணம். ஆனால், கிராம மக்களிடையே சேமிக்கும் பழக்கத்தை ஏற்படுத்துவதில் தபால் தந்தி இலாகா குறிப்பிடத்தக்க வகையில் பணியாற்றி வருகிறது. அதன் விஸ்தரிப்புத் திட்டத்தில் கிராமப் பகுதிகளுக்கு முதலிடம் அளிக்கப்பட்டுள்ளது. மூன்றுவது ஐந்தாண்டுத்திட்ட கால இறுதிக்குள், தபால் சேமிப்புப் பணியாற்றும் 42 ஆயிரத்துக்கும் அதிகமான நிலையங்கள் அமைக்கப்பட்டுவிடும். இவற்றில் பெரும்பாலானவை, பஞ்சாயத்து தலைமைக் காரியாலயங்களிலும், சமுதாய அபிவிருத்தி நிலையங்களிலும், தேசிய விஸ்தரிப்புத் திட்ட வட்டாரப் பகுதிகளிலும் இடம் பெற்றிருக்கும்.

★

## பி. எஸ். ராமையா மணி விழா

சென்னையில் ஜனவரி-மீ 31-ந்தேதி நடைபெற்ற பி. எஸ். ராமையா மணி விழாக் குழு செயற் குழுக் கூட்டத்தில் விழாவை ஏப்ரல் 14-ல் சென்னையில் நடத்துவதென்றும், அப்போது நிதி திரட்டி ஒரு கணிசமான தொகை அவருக்கு அளிப்பதென்றும், ஒரு மலர் வெளியிடுவதென்றும், நாடகம், சிறு கதைபற்றிய உரைக் கோவைகள் நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

நிதிக்குவரும் நன்கொடைகளை ராயப்பேட்டை இந்தியன் பாங்கியில் போட்டு குழுத் தலைவரும், பொருளாளரும் சேர்ந்து தொகை செலுத்தவும் எடுக்கவும் அதிகாரம் அளிக்கிறது.

மலர் சம்பந்தமாக ஆள்வார்பேட்டை இந்தியன் பாங்கியில் 'பி. எஸ். ராமையா மணி விழா மலர்க் குழு' என்ற பெயரில் கணக்கு ஏற்படுத்தி பொருளாளரும், திரு. வள்ளியப்பாவும் சேர்ந்து தொகை செலுத்தவும், எடுக்கவும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

நிதி வசூல் சம்பந்தமாக திருவாளர்கள் எஸ். வி. சகஸ்ரநாமம், டி. கே. ஷண்முகம், ஜெமினி கணேசன், ந. சிதம்பர சுப்பிரமணியன், அழ. வள்ளியப்பா ஆகியோர் அடங்கிய உப-குழு அமைக்கப்பட்டது. இதற்கு திரு. கி. ரா. கன்வீனர்.

மலர் சம்பந்தமாக திருவாளர்கள் கே. ஸ்ரீநிவாசன், டி. எஸ். சொக்கலிங்கம், எஸ். வி. சகஸ்ரநாமம், எஸ். டி. சுந்தரம், எஸ். விஸ்வநாதன் (சாவி.), அழ. வள்ளியப்பா ஆகியோர் கொண்ட ஒரு உப-குழு அமைக்கப்பட்டிருக்கிறது. இதற்கு திரு. சிசு. செல்லப்பா கன்வீனராக இருப்பார்.

உரைக்கோவை சம்பந்தமாக திருவாளர்கள் மு. வரதராசனுர், கி. வ. ஜகன்னுதன், கி. ரா. ஆகியோர் கொண்ட உப-குழு அமைக்கப்பட்டது. இதற்கு திரு. சோமல சாமிநாதன் கன்வீனராக இருப்பர்.

★

## புதுவகை *பாக்டீரியா*

சோவியத் உயிர் இயல் நிபுணர்கள், இதுவரை தெரியாத காற்றில்லாவிடத்தில் வசிக்கும் பாக்டீரியாக்களில் 16 வகையைப் பல்வேறு நிலங்களிலிருந்து கண்டு பிடித்துள்ளார்கள்.

இந்த பாக்டீரியாக்களுக்குப் பெரிய ஸெல்கள் உள்ளன; இந்த ஸெல்கள், ஸ்போர் மூலம் இனப் பெருக்கம் செய்யும் பாக்டீரியாக்களின் ஸெல்களைவிடப் பெரியவை.

காற்றில்லாவிடத்தில் வசிக்கும் பாக்டீயாக்கள் தாம், பூமியில் முதன் முதலில் தோன்றிய ஜீவராசியெனக் கருதுகிருர்கள் விஞ்ஞானிகள்.

இவை ஆக்ஸிஜன் புகுகின்ற நிலத்தின் மேல்புற அடுக்குகளில் வாழுகின்றன; ஆக்ஸிஜன் பட்டால் இவை இறந்து விடும்!

இவற்றின் உடலுக்கு ஆக்ஸிஜன் ஒத்துக் கொள்வதில்லை. எனவே, இவற்றைக் கண்டு பிடிப்பது கடினமாயிருந்தது.

விஞ்ஞானிகள் ஆராய்ச்சிக் கூடத்தில் ஆக்ஸிஜன் இல்லாத அமைப்பு ஒன்றைச்செய்து அதில் இப்பாக்டீரியாக்களை வைத்தார்கள். அவை சாதாரண நிலையில் உயிர் வாழ்ந்து, பெருகின.

இவ்வகை பாக்டீரியாக்கள் அசாதாரண வடிவமுள்ளவை. இவற்றில் சில வேர்களும் தண்டுகளும் உடைய செடிகளைப் போலத் தோன்றுகின்றன.

இந்த வேர்களும் தண்டுகளும் இந்தப் பாக்டீரியாக்களுக்கு உறிஞ்சிக் கருவிகளாகப் பயன்படுகின்றன போலும்.

'அண்ட வெளியில் மனிதன் முதன் முதலில் இத்தகைய காற்றில்லா விடத்தில் வசிக்கும் பாக்டீரியாக்களையே காண்பான். எனவே, இவை குறித்து பூமியில் ஆராய்வது நல்லது,' என்கிருர் அவர்.

## புக்-போஸ்ட் கட்டணங்கள்

அச்சடித்த எதையும் கொண்ட நூல் அஞ்சலுக்குரிய தபால் கட்டணங்கள் குறித்துதபால்தந்தி இலாகா அதிகாரியொருவர் விளக்கியுள்ளார் உள்நாட்டுத்தபால் விஷயத்தில் அச்சடித்த எந்தப் பொருளையும் கொண்ட நூல் அஞ்சலுக்கு 50 கிராம் எடை வரை 10 பைசா கட்ட வேண்டும். அதற்கு அடுத்து 5 பைசா வீதம் கட்டவேண்டும். அச்சடித்த புத்தகங்களை மட்டும் கொண்ட நூல் அஞ்சலுக்கு 50 கிராம் எடை வரை 5 பைசா; அடுத்த ஒவ்வொரு 25 கிராமுக்கும் மூன்று பைசா.

இந்திய பத்திரிகைப் பதிவாளருடன் பதிவு செய்து கொண்டுள்ள சஞ்சிகைகளின் விஷயத்தில் 100 கிராம்வரை 8 பைசாவும், கூடுதலான ஒவ்வொரு 50 கிராமுக்கும் மூன்று பைசாவும் கட்டவேண்டும்.

விமானத்தில் அனுப்பப்படும் தபால்கள் சம்பந்தப்பட்டவரை எல்லாவிதமான நூல் அஞ்சல்களுக்கும் பத்துகிராம் எடைக்கு 4 பைசா வீதம் கூடுதல் கட்டணம் விதிக்கப்பட்டுள்ளது.

---

**கூடலூர் டி. மு. கோ.**
O. P. 12/65

திரிசங்கு படையாச்சி வகையரு —மனுதாரர்கள்
அன்னம்மாள் —ரெஸ்பாண்டெண்ட்

ஷை நெம்பரில் மனுதாரர்கள் இறந்த ஆறுமுக படையாச்சிக்கு வரவேண்டிய கடன்களை வார்சுகள் முறைமையில் வசூல் செய்ய வார்சு சர்டிபிகேட் கோரி கொடுத்த மனு 26-2-65ல் ஈரங்கி. ஆக்ஷேபணையுள்ளவர்கள் அன்று ஆஜராகி தெரிவிக்கலாம்.

A. சக்ரபாணி,
1/6499/132 அட்வகேட்.

---

**அரியலூர் டி. மு. கோ.**
S. C. 2666/64.

உ. தா. இலையூர் தெற்கு வெளி பெருமாள் படையாச்சி —வாதி
ஷையூர் மாணிக்க படையாச்சி —பிரதிவாதி

ஷை நெம்பரில் வாதி உம்முடைய பேரில் பிருமிசரி நோட்டுப்படி ரூ. 443-65 கிடைக்கத் தாவா செய்து சம்மன்கள் போய் சார்வாகாமல் ஒட்டி சார்வு செய்யவும் பப்ளிகேஷன் செய்யவும் உத்திரவாகி 23-2-65-ல் ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையை அன்று தெரிவிக்காவிடில் ஒருதலைப்பக்ஷமாக தீர்மானிக்கப்படும்.

N. V. ரெங்கசாமிஅய்யங்கார்
3/6501/134 அட்வகேட்.

---

**திண்டிவனம் டி. மு. கோ.**
O. S. 684/64

வெங்கடேச கவுண்டர்—வாதி
ஆனந்தக்கவுண்டர் வகையரு —பிரதிவாதிகள்

மேற்படி நெ. வாதிக்கு 15—11—1952-ல் ஆனந்தக் கவுண்டரும் வெள்ளக்கண்ணு கவுண்டரும் சேர்ந்து ரூ. 150-00-க்கு எழுதிக் கொடுத்த அடமான பத்திரத்தின் பேரில் ரூ. 148-64 வரப்பற்ற செய்த தாவா 4—3—65-ல் ஈரங்கி. அன்று 3-ம் பிரதிவாதியான சித்ரகுப்தன் என்கிற ராமசாமிக் கவுண்டர் ஆக்ஷேபணையைத் தெரிவிக்கலாம்.

V. சுப்பிரமணியம் and
V. முனுசாமி,
3/6501/135, வக்கீல்கள்,

## கள்ளப் பணம்

நாட்டின் பல பகுதிகளில் நடந்த சோதனைகளின் விளைவாக இதுவரை 44 கோடியே 81 லட்சம் ரூபாய் கள்ளப்பணம் கைப்பற்றப்பட்டதாக நிதி மந்திரி லோக்சபையில் அறிவித்தார். 862 இடங்களில் சோதனை நடத்தப்பட்ட 343 பேர்களிடமிருந்து கடத்தல் பொருட்கள் கைப்பற்றப்பட்டதாகவும் கணக்கில் காட்டப்படாத பணம் நகைகள் ஏராளமாக இருந்ததாகவும் ரகசிய தஸ்தாவேஜுகளும் கண்டு பிடிக்கப் பட்டதாகவும் ஸ்ரீ. டி. டி. கே. கூறினர்.

## ரஷ்யாவில் – கேள்வி பதில்

# இந்தியாவைப் பற்றி...

இரு பெண்கள் என்னை வேகமாகக் கடந்து சென்றனர். அவர்களைப் பார்க்கும் போது வித்தியாசம் ஒன்றும் தெரியவில்லை. எல்லாப் பெண்களையும் போலத் தான் இருந்தனர். ஆனால், அவர்களது கோட்டுகளுக்குக் கீழே புடவை தெரிந்தது!...

'இந்தியாவைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?' என்ற புதிர் நிகழ்ச்சி நடைபெறப் போகிறது அன்று மாலையில், அந்த 26-ம் எண்ணுள்ள பள்ளியிலே! இதை நான் அறிவேன். என்றாலும், ஹாலில் நுழைந்தபோது எனக்கு ஆச்சரியமுண்டாயிற்று.

பெண்கள் பளிச்சென மின்னும் புடவை உடுத்தியிருந்தனர். ஆண்கள் வெள்ளை நிஜார் அணிந்திருந்தனர். அவர்களின் மேசை மீது வெள்ளைத் துணி விரிக்கப்பட்டிருந்தது. அந்தப் புதிருக்கு ஏற்பாடு செய்திருந்தவர்களை உடனே இனம் கண்டு கொண்டேன். அவர்கள் கிளர்ச்சியுற்ற நிலையில், சமிக்ஞை பாஷையில் பேசிக்கொண்டிருந்தனர். அவர்களுக்கு எல்லாம் தெரியும் போலும்.

புதிருக்கான கேள்விகளும், நிகழ்ச்சியும் ஏற்கனவே அறிவிக்கப்பட்டு விட்டது போலும்!...

ஆனால், கீழ்நிலை வகுப்புக்களைச் சேர்ந்த இத்தனை மாணவர்கள் கூடுவர் என்று யாரும் கருதியிருக்க மாட்டார்கள். வீட்டுக்குப் போகச்சொல்லும் பொழுது, அவர்கள் போனால் தானே?......

முதல் கேள்வி, இந்திய அரசின் கொடியைப் பற்றியது.

மேடையில் ஏறிய பெண், இந்திய தேசியக் கொடியிலுள்ள வர்ணங்களின் பொருளை விளக்கினாள்.

"மத்தியிலுள்ள சக்கரத்தில் எத்தனை ஆரக் கால்கள் இருக்கின்றன?"

"இருபத்து நான்கு" என்று எல்லோரும் முழங்கினர்.

இப் புதிர் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவர்கள் சற்றும் எதிர்பாராத விஷயம்! ஒரு குழந்தை பதில் சொல்லும் போது, மற்றக் குழந்தைகள் சும்மா இருக்க வேண்டாமா! கேள்விகள் ஒன்றுக்குப் பின் ஒன்றாய் வந்தன; பதில்கள் ஒட்டு மொத்தமாக, ஒவ்வொரு தடவையிலும் சேர்ந்து வந்தன!

"தாகூர் என்பவர் யார்?"

இதற்குக் கிடைத்த பதில், ஒரே கூச்சல்! ஒன்றும் சரியாகக் காதில் விழவில்லை!

தாகூர் பிறந்த இடம், அவரது புகழுக்குக் காரணம், அவர் சோவியத் யூனியனுக்கு வந்த வேளை—ஆகிய விவரங்களை, தமக்குத் தெரிந்த தகவல்களை, ஒவ்வொருவரும் ஒரே சமயத்தில் சொல்ல முயன்றனர்!

குழந்தைகளுக்குத் தாகூரைப் பற்றி மிக நன்றாகத் தெரியும். ஏனெனில், அந்தப் பள்ளியில் இந்திய நண்பர்கள் சங்கம் ஒன்று உண்டு. அதற்குக் குருதேவர் ரவீந்திரரின் திருநாமமே இடப்பட்டிருந்தது! "நவம்பர் 14-ம் தேதியன்று இந்தியாவில் என்ன விழா?" இதற்கும் குழந்தைகள் சரியான விடை தந்தார்கள்.

"நேருவைப் பற்றி யார் இப்பொழுது பேசப் போகிறீர்கள்?" என்ற கேள்வி பிறந்தது.

ஓல்யா காஷ்னிகோவா என்னும் ஏழாம் படிவ மாணவி மேடை மீது ஏறினாள்.

"நேரு ஒரு வக்கீலின் மகனாகப் பிறந்தார். பிரிட்டனில் கல்வி பயின்றார். பிரிட்டிஷ் காலனி ஆதிக்கவாதிகள் நேருவை வெறுத்தனர். சிறையில் அடைத்தனர். நேருவுக்குப் புத்தகம் என்றால் மிக ஆசை. அவர் மார்க்ஸின் நூல்களைப் படித்தார். அவர் மக்களின் நல்வாழ்வுக்காகப் பாடுபட்டார். நேரு ஒரு பெரிய சமாதான வீரர். அவருக்குக் குழந்தைகள் என்றால் மிகப் பிரியம். அவருக்கு விளையாட்டில் ஆர்வமுண்டு. முதுமைப் பருவத்திலும், அவர் நன்றாக நீந்தினார்; சைக்கிள் ஓட்டினார்."

நேருவைப் பற்றி ஓல்யா பேசியது மிகக் குறைவுதான். ஆனால், அவள் தனக்கு முக்கியமாகத் தோன்றிய அம்சங்களையே குறிப்பிட்டாள். அவளுக்கு மிக நன்றாகத் தெரிந்த, அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஒருவரைப் பற்றி பேசினாள்.

புதிர் நிகழ்ச்சி ஒரு மணி நேரத்திற்கு மேல் நீடித்தது. ஆனால், மேசை மேலிருந்த இனிப்புப் பண்டங்கள் அப்படியே இருந்தன! குழந்தைகளின் இதயத்தை எதுவோ கவர்ந்து இருக்க வேண்டும்! நான் வந்திருந்தோர் அனைவரையும் சதா கவனித்தேன். எந்த முகத்திலும் அலட்சிய பாவம் இல்லை. அது ஆரம்பத்தில் ஒரு முகத்தில் இலேசாகத் தெரிந்தது; பின்னர் மறைந்துவிட்டது. வட்ட முகமும், கூரிய மூக்குமுள்ள ஒரு முகத்தில் கேலி படர்ந்தது. அந்த மாணவனுக்கு இது முக்கிய விஷயமாகத் தோன்றவில்லை போலும்! சிறிதுநேரத்தில், அவனும் தனது தோழர்களின் பேச்சை ஊன்றிக் கேட்க ஆரம்பித்து விட்டான். கேலிச் சிரிப்பு மறைந்து, அவன் முகத்தில் பொறாமை குடிகொண்டது: 'என்னை விட மற்றவர்களுக்கு ஏன் அதிகம் தெரிந்திருக்கிறது?' என்ற பொறாமைதான்! இறுதியில், அவனது பொறாமை மறைந்தது; அவனும் நிகழ்ச்சியில் ஒன்றிப்போனான்.

'தாஜ்மஹாலைப் பற்றி இந்தியர்கள் என்ன சொல்லுகிறார்கள்?'

அவன் இவ்விதம் பதிலளித்தான்:—

'தாஜ்மஹாலைவிட இந்தியாவில் வேறு அழகான இடமே இல்லை!'

புதிருக்கு விடை இது வல்ல; என்றாலும் அவன் ஒரு 'பாயிண்ட்' பெற்று விட்டான்! பின்னர், மேடை மீது ஒரு பக்கிரி வந்தார். அவர் திரைக்குப் பின்னாலிருந்த தமது உதவியாளனின் மண்டையை உடைக்க முயன்றார். ஆனால், 'ஐயோ!' என்ற ஓலத்திற்குப் பதிலாக, வெடிச் சிரிப்பைத்தான் அவர் கேட்டார்.

பக்கிரியின் நண்பர் தன் தலையின்மேல் ஒரு முட்டைக் கோசைக் கவிழ்த்தி, அதைத் துண்டால் மூடியிருந்தார். அதைக் குறும்புக்காரக் குழந்தைகள் பார்த்துவிட்டார்கள்!

புதிர் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருந்த ஆசிரியர்களுக்கும் ஒரே குதூகலம் தான். அவர்கள் குழந்தைகளைக் கட்டுப்படுத்தவில்லை. குழந்தைகளின் இஷ்டம் போல் விட்டுவிட்டார்கள். எல்லோரும் ஒருமித்து பதில் கூறவும், அடுத்தவரின் பதிலுக்கு மேல் பேசவும், பக்கத்தில் இருப்பவருக்குச் சொல்லிக்கொடுக்கவும் செய்தார்கள் மாணவர்கள்! அவர்களை யாரும் தடுப்பாரில்லை...

பரிசு வழங்க வேண்டிய வேளையில், யாருக்கு அதைக் கொடுப்பது, யார் புதிருக்குச் சிறந்த விடையளித்தார்கள் என்பதையும் குழந்தைகளே தீர்மானித்தார்கள். நிறையப் பேருக்குப் பரிசுகள் கிடைத்தன! நேருவைப்பற்றி நன்றாகப் பேசிய ஓல்யாவுக்கும், தாஜ் மஹாலைப்பற்றி விடையளித்த 'அன்பருக்கும்' பரிசுகள் வழங்கப்பட்டன.

கேள்வி—பதில் நிகழ்ச்சியின் கடைசிக் கேள்வி இது:—

'இந்தியரும் ருஷ்யர்களும் சகோதரர்கள்' என்பதற்கும் 'நம்மிரு மக்களின் நட்பு நீடூழி வாழ்க' என்பதற்கும் இந்தியில் எப்படிச் சொல்ல வேண்டும்?'

குழந்தைகள் இவ்வாறு கோஷமிட்டன:—

'ஹிந்தி—ரூஸி, பாய், பாய்!'

'சோவியத்—பாரத மித்ரதா ஜிந்தா பாத்!'



### ஜடவாயு!

நுரையீரலில் புற்று நோய் ஏற்பட்டிருப்பதைக் கண்டு பிடிப்பதற்கு அணுக்கதிர் இயக்கமுள்ள ஜடவாயுக்களைப் பயன்படுத்தலாம் என மேற்கு ஜெர்மனி நிபுணர் ஒருவர் கண்டு பிடித்திருக்கிறார். இந்தப் புதிய முறையின் மூலம் புற்று நோயை ஆரம்ப காலத்திலேயே கண்டுபிடித்து எளிதில் குணமாக்கிவிடலாம் என டாக்டர்கள் கருதுகிறார்கள். இது வரையிலும் நுரையீரல் புற்று நோயைக் கண்டு பிடிப்பது மிகவும் கடினமான காரியமாக இருந்து வந்தது. புற்று நோய் ஆராய்ச்சி இந்தப் புதிய முறை பெரும் புரட்சியையேற்படுத்தும் என எதிர்பார்க்கப்படுகிறது. (யூ. பி. எஸ்.)

### சுழலும் துப்பாக்கி!

காமா கதிர்களால் பயங்கரமான புற்று நோய்க்கட்டிகளை எதிர்த்துப் போராடும் பொழுது நோயாளியைச் சுற்றிச் சுழன்றுவர, 'ராகஸ்' என்னும் நவீன கோபால்ட் துப்பாக்கியைக் கண்டுபிடித்திருக்கின்றனர், சோவியத் மருத்துவ நிபுணர்கள்! 'கோபால்ட்-60' என்னும் பொருள் உள்ள இந்தச் சுழல் துப்பாக்கியானது, புற்று நோய்க் கட்டிகளின்மீது தனது கதிர்வீச்சை அதிகப்படுத்துகிறது; இதனால் ஆரோக்கியமான செல்களுக்கு ஆபத்துக் குறைவு என்கிறார்கள் மருத்துவர்கள்.

### நுரையீரல் வியாதி

நுரையீரல் வியாதிக்குச் சிகிச்சையளிக்க, நவீன ஆயுதங்களை உற்பத்தி செய்யத் துவங்கியுள்ளது கீவ் மருத்துவக் கருவி ஆலை! இதன் உதவியால் பெரியவர்களும் குழந்தைகளும் சுவாசம் விடும் நுட்பமான அளவையும், மனித உடலின் காற்றுப் பரிமாற்றத்தையும், பிராணவாயுக் குறைவையும் துல்லியமாகக் கணக்கிட முடியும். இது ஒரு சிறிய டைப் மிஷின் அளவில் இருப்பதால், எங்கும் சுமந்து செல்ல இயலும்.

### உணவிலும் மூடப் பழக்கம்

உணவு சம்பந்தமாக உலக மக்களிடையே பல விதமான மூடப் பழக்கங்கள் நிலவி வருவதாகவும், இந்தப் பழக்கங்களை உடனடியாகக் கைவிடவேண்டும் எனவும் வலியுறுத்தி வருகிறார்கள். உணவுப் பொருள்களைப் பற்றி இன்று நிலவும் பல கருத்துக்கள் தவறானவை என இவர்கள் கூறுகிறார்கள்.

புளித்த சாராயத்தினால் இரத்த நீர்ச்சத்து அதிகமாவதில்லை என்றும் கஷ்கொட்டையினால் முடக்குவாதம் நீங்குவதில்லை என்றும் அவர்கள் கூறுகிறார்கள். நீரிழிவு நோய் வராமல் தேன் பாதுகாக்கும் என்பது தவறு. இரத்த அழுத்த வியாதியை வெள்ளைப் பூண்டு தடுக்காது. கிட்டப் பார்வையைக் குணமாக்க காரட் சாறு பயன்படாது. பழுப்பு நிற முட்டையைவிட வெள்ளை நிற முட்டையில் சத்து அதிகம் என்பது தவறான கருத்து. எல்லா முட்டையிலும் ஒரே அளவு உணவுச் சத்துதான் இருக்கிறது.



Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10. Single copy: Twelve Paise.